தளவாய் அரியநாத முதலியார்




மதுரைக் கோயிலில் கட்டிய
ஆயிரக்கால் மண்டபத்தி லுள்ள
அவர் கற்சிலைப் படம்

திருநெல்வேலி

# தளவாய் முதலியார்

## குடும்ப வரலாறு

(தக்ஷிணசரித்திரத்தில் மறந்துபோன ஒருபகுதி)


திருநெல்வேலி ஜில்லா பிரகாசபுரம்

**ஸ்ரீமான் B. J. M. குலசேகர ராஜவர்கள்**

இங்கிலீஷில் தொகுத்தெழுதியதை

**மா. அனந்தநாராயணன்**

*தமிழில் அமைத்தெழுதியது*



**சென்னை**

ஆசிரியர் அச்சுப்பிரசுராலயம்

எட்வர்ட் எலியட் ரோடு

1925] **மயிலாப்பூர்** [காபீரைட்

# பொருள் அடக்கம்


**அரியநாத முதலியாரின் கற்சிலைப்படம்**

முகவுரை — அ. மாதவையர் ... ... vi-viii

குடும்பவரலாற்றின் சுருக்கம் ... ... 1-3

1 அத்தியாயம் - விஜயநகர ஸம்ஸ்தானம் — அரியநாயக முதலியார் ... 5

2 ,, அரியநாத முதலியார் தெற்கு தேசங்களுக்கு வந்த வரலாறு ... 8

3 ,, அரியநாயக முதலியாரின் ஆட்சி ... 11

4 ,, தலைக்கோட்டை யுத்தத்தில் அரியநாதர் புரிந்த சேவையும், பின்பு விஜயநகரராஜ்யத்தின் நிலைமையும் ... 18

5 ,, விஜயநகரராஜ்யம் அழிந்தபின் அரியநாதரின் பரிபாலனம் ... 20

6 ,, அரியநாத முதலியாருக்குப் பின்வந்தவர் 24

7 ,, நயினத்தை முதலியார்—சின்னத்தம்பி முதலியார் ... ... 26

8 ,, மாவை குமாரசுவாமி முதலியார் ... 29

9 ,, ஆறை அழகப்ப முதலியார் ... 30

10 ,, தளவாய் குமாரசுவாமி முதலியார் ... 36

11 ,, மேன்மேலும் நேர்ந்த தொந்தரைகள் ... 42

12 ,, காப்டன் கைலாட் மதுரைக்கு இரண்டாந்தரம் வருவதற்கு முன்னும் பின்னும் நடந்த செய்திகள் ... 55

13 ,, யூஸப்கான் மரணத்திலிருந்து நவாபைவிட்டுப் பிரிட்டிஷார் கைவசம் துரைத்தனம் மாறியது வரையும் ... 61

14 ,, தளவாய் குமாரசுவாமி முதலியாருக்குப் பிற்பட்ட சில முக்கியஸ்தர்களின் வமிசாவளி ... ... 71

(1) மூத்தகொடி-தீத்தாரப்பமுதலியார் வமிசம் ... 74

(2) தளவாய் குமாரசுவாமி முதலியார் வமிசம் ... 75

# முகவுரை

ஸ்ரீமான் ராவ்சாகிப் மேடை தளவாய் திருமலையப்ப முதலியார் எனது பழைய நண்பர்: திருநெல்வேலி ஹிந்துகலா சாலையில் அவர் கல்வி பயின்ற காலந்தொட்டு நான் அவரை அறிவேன்; பின்னர், அடுத்துள்ள தச்சநல்லூரிலே நான் உத்தியோகஞ் செய்துவந்த காலத்தில் இருவரும் நெருங்கிப் பழக நேர்ந்து, அறிமுகம் நட்பாய் முதிர்ந்தது. ஆயினும், அவர் குடும்பத்தின் பண்டைப் பெருமையையும் புகழையும் சில வருஷங்களுக்கு முன்புதான் நான் அறியலானேன்.

மதுரைச் சீமையைப்பற்றி நெல்ஸன் துரை எழுதியுள்ள அரும் பெரும் நூலை முதலில் படிக்கும்பொழுது, தளவாய் அரியநாயக முதலியாரின் சரித்திரத்தை அறிந்து வியப்படைந்து, அமயமும் அவகாசமும் நேரும் பிற்காலத்தில் அது பயன்படுத்தற் குரிய விஷய மென்று மனக்குறிப்பிற் பதிவுசெய்துவைத்திருந்தேன்.

துரைத்தன ஊழியம் ஒழிந்து, தமிழுக் குழைப்பதை மேற்கொண்டு, **பஞ்சாமிர்தம்** பத்திரிகையைத் தொடங்கி, அதன் வாயிலாகத் தமிழ்மக்களுக்குப்

> பைந்தமிழ் நாட்டுச் சரித்திரம் பகர் பல
> விந்தைகள் வீரச் செயல்கள் மிளிர் கதை

களை எடுத்துரைத்து, நாட்டுப்பற்றை வளர்க்க எண்ணிய போது, அம் மனக்குறிப்பு நினைப்புக்கு வர, அரியநாதரின் வரலாற்றை ஆராயலானேன். அந்த முயற்சியில், அவர் வழித் தோன்றலான எனது பழைய நண்பரின் உதவியை நாட, அச்சிடச் சித்தமாய் அமைத்து வைத்திருந்த தன் குடும்ப

சரித்திரத்தை மனமுகந்து உதவி, அதை அச்சேற்றும் என் விருப்பத்துக்கும் இசைந்தனர். அந்த விருத்தாந்தத்தை என்மகன் தமிழில் அமைத்து எழுதியதே இந்நூல்.

அரசரை அமைக்கும் அருந்திறல் அமைந்த அதிவீரரான தளவாய் அரியநாத முதலியாரின் சரித்திரத்தைப் படிக்கும் தமிழர் அனைவரும், அளப்பரிய ஆச்சரியத்தையும், அவரும் ஒரு தமிழரே என்பதால் எழும் அகமகிழ்ச்சியையும், அடைவது நிச்சயம். அந்த வரலாற்றை, இதனினும் விரிவாக, **தட்சிண சரித்திரவீரர்** என்னும் நூலிலே விளக்கியிருக்கிறேன். இந்நூலோ, தளவாய் முதலியார் குடும்பத்தின் மூலபுருஷரோடு நின்று விடாது, அவர் காலந்தொட்டு நம் காலம் வரை, அவர் சந்ததியாரின் வரலாறுகளையும் கூறுகின்றது.

அரசர், அதிகாரிகள், என்னும் பயம் தவிர்ந்து, தலை நிமிர்ந்து, மக்கள், தன்மரியாதையும் சகோதர சமத்துவ உணர்ச்சியும் பெருகிவரும் இந்நாளிலே, பண்டை நாளிற் போல, எவருமே "திண்டுதிருப்பி அதிகாரம்" செலுத்துதல் எளிதன்றாயினும், சிறந்த ஒழுக்கத்தினாலும் உயர்ந்த பண்புடைமையினாலும் தம்மோடு ஒத்த மாந்தரின் பெருமதிப்பைப் பெற்று விளங்குதல், முன்னினும் இன்றே எளிதென்னலாம். அரியநாதரின் வாழ்க்கைச் சரிதையில் ஒரு விஷயம், மீண்டும் மீண்டும் என் மனத்தில் பதிந்து வியப்பை யளித்தது: 'அரியநாதர், மதுரை நாயகர்கள் வம்சத்தை ஸ்தாபித்தது மன்றி, முதல்நான்கு நாயகர்களின் ஆட்சிக் கால மெல்லாம், தானே அரசர்போல் ஆண்டு வந்தார்; நாயக மன்னர்களைத் தன்னிஷ்டம்போல் ஆட்டுவித்தார்; அவர் தேக வியோகமான பின்னரே மதுரை நாயகர்கள் சுயாதீனராயினர்' என்று கூறுவோருங்கூட, 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' என்றிருந்த அந்தக்காலத்திலுமே, பரம ஏழையாய்ப்

பிறந்து, "பெறலருந்திருப் பெற்று" விளங்கிய அவர், அறத் தாற்றைவிட்டுவிலகித் தன்னயங்கருதி, அதிக்கிரமமான எதை யேனும் செய்தாரென்று கூறிலர். அரியநாதரின் பதவியையும் அதிகாரத்தையும் அளவிட முயலுவோர், அவர் தளவாய்ப் பட்டம் வகித்துப் பரிபாலித்த விஜயநகர ஸம்ஸ்தானத்தின் பலபிரிவுகளில் ஒன்றும் சந்திரகிரிச் சிற்றரசரான சென்னப்ப நாயகர், பிரிட்டிஷ் ஈஸ்டிந்தியா கம்பெனியாருக்குக் கொடுத்துதவிய ஒரு சிறு கடற்கரைப்பட்டினமே, இக்காலத்திலே, சென்னைமாகாணத்தின் ராஜதானியாய் இலங்குவதை, மற வாராக. தளவாய் முதலியார்கள் இராஜ்யபரிபாலனம் செய்த அந்நாள் முதல், செல்வமும் செல்வாக்குமுள்ள பிரபுதிலகர் களாய்த் திகழும் இந்நாள் வரை, இக் குடும்பத்தார் பலரும், நெறி தவறாது வாழ்ந்துவந்திருப்பது, கவனித்தற் குரியது.

ஒப்புயர்வற்ற ராஜதந்திரியாயும் யுத்தவீரசிகாமணியா யும் தான் இலங்கியது போலவே, உத்தமகுணசீலராயும் இலங்கிய தளவாய் அரியநாத முதலியாரின் வழித்தோன்ற லான எனது நண்பரும், அவர் சந்ததியாரும், குடும்பமும், தமது ஈடெடுப்பில்லாத முன்னோரைப் போலவே, பல்லாண்டு பல்லாண்டு அறநெறியிற் பல்கித் தழைக்குமாறு திருவருள் சுரப்பதாகுக.

மயிலாப்பூர்
25-2-1925

அ. மாதவையர்

## குடும்ப வரலாற்றின் சுருக்கம்

**அரியநாயக முதலியார்,** கி. பி. 1559-ம் (? 1529) ஆண்டிலே, விசுவநாத நாயகருடன் தமிழ்நாட்டுக்கு வந்தார். விசுவநாத நாயகர், விஜயநகர சக்கரவர்த்திகள் சாதியினர்; அந்த ஸம்ஸ்தான சேனாபதிகளில் ஒருவர். விஜயநகர ஸம்ஸ்தானத்துக் குட்பட்டுச் சோழபாண்டிய நாடுகளை ஆண்டு வந்த சிற்றரசர்களுக்குள் சில விவாதங்களைத் தீர்க்கும் பொருட்டே, அவர் இருவரும் வந்தனர். அந்தச் சமயத்தில் பாண்டியராஜன் சந்ததியின்றி இறந்ததனால், அவன் நாடும் ராஜ்யாதிகாரமும், சக்கரவர்த்தியின் காரியஸ்தர்களான இவர்கள் கைவசமாயின. இவ்வண்ணம் பாண்டிய மண்டலம் முழுமையும் சோழநாட்டில் ஒருபகுதியும் அரியநாயக முதலியாரின் சுவாதீனமாய்விடினும், முன்னுள்ள பிரதானி ஸ்தானத்திலேயே தானிருந்துகொண்டு, தன் துணைவரான விசுவநாத நாயகரைப் பாண்டியராஜனாக முடிசூட்டிவைத்தமை, அவருடைய தன்னயங் கருதாப் பெருந்தன்மையை நன்கு விளக்கும். அரியநாயக முதலியாரின் சந்ததியார், பதினேழாவது நூற்றாண்டின் மத்தியிலே திருமலை நாயகர் காலம் வரை, தளவாய்ப் பிரதானி உத்தியோகத்தை வகித்து வந்தனர். திருமலை நாயகர், திருநெல்வேலிப் பிரதேசத்தை ஒரு தனிச் சீமையாக்கி, தன் பிரதானியை அதை ஆளும்படி ஏற்படுத்தினார். மதுரை நாயகர் வம்சத்துக்குப் பின் இராஜ்யத்தைப் பெற்ற நவாபுக்கள் காலத்திலும், அரியநாயகர் குடும்பத்தாரே குத்தகைதாரராக (Renters) நாட்டை ஆண்டுவந்தனர். இந்தக் குத்தகைக் குரிசில்கள், நிலவரி (Revenue) விஷயத்தில் மட்டுமன்று, சொத்து சம்பந்தமான (Civil) விவா

தங்கள், குற்ற (Criminal) விசாரணை, தண்டனைகள், இரா ணுவ (Military) அமுல்களிலும், அதிகாரஞ் செலுத்திவந் தார்கள். பிரிட்டிஷ் ஈஸ்டிந்தியா கம்பெனியாரின் காரியஸ்தர் களுக்கு, அடங்காத பாளையக்காரர்களை அடக்கி ஒடுக்கி, இவர்கள் பேருதவி செய்தனர். இப்படியிருந்தும், 1801-ம் ஆண்டிலே நவாபிடமிருந்து பிரிட்டிஷ் கம்பெனியார் ராஜ்யா திகாரத்தைப் பெற்றபோது, தளவாய் முதலியார் குடும்பத் தின் அந்தஸ்தையும் பெருமையையும் சரித்திரப்படிக் குரிய சுதந்திரங்களையும் எடுத்துரைப்பார் அதிர்ஷ்டக்குறைவினுல் இல்லாமற் போனதால், புதிதாய் வந்த ராஜ்யாதிகாரிகள், இக் குடும்பத்தின் சேவைக்குத் தக்கபடி கவுரவஞ்செய்யாமற் போயினர். இக் காரணத்தால், தளவாய் முதலியார் குடும்பத் தின் இசையொளியும் ராஜபதவியும் அதிகாரமும் நாளடை வில் குன்றிவிட, தளவாய் முதலியார்களின் கீழே சேவித்து வந்த பாளையக்காரர்கள் மாத்திரம், இராஜாக்களாகவும் ஜமீன் தார்களாகவும் இக்காலத்தில் விளங்குகின்றனர். பிஷப் கால் ட்வெல் என்பவர் திருநெல்வேலி ஜில்லாவின் சரித்திரத்தில் கூறியிருப்பதை, இவ்விடத்தில் எடுத்துக்காட்டுதல் பொருந் தும்:—

பாளையக்காரர்கள் சந்ததியார், போர்த்தொழி லொழிந்து அமைதியாய் சுகஜீவனஞ் செய்யும் ஜமீன்தாரர்களாக, நம் காலத்திலும் வாழ்கின்றனர்; ஆனுல், கர்நல் புல்லர்டன் காலத்திலேயும், நவாபின் ஆட்சிக்கால முழுதுமே, பேரதிகா ரத்தோடு விளங்கிய குத்தகைக்காரரின் ஸ்தானத்தில் எவரு மின்றி, அவர் பெயரே மறந்து போயிற்று." ஆயினும், ஹிந் துக்களின் கோயில்களிலும் பொதுச் சபைகளிலும், இக்குடும் பத்தார்க்கு ராஜமரியாதைகளும் அக்கிராசனமும் அளிக்கப் படுகின்றன.

**வர்ணசிந்தாமணி** யிலிருந் தெடுத்த பின்வரும் வாக்கியங்கள், தளவாய் முதலியார் குடும்பத்தின் பெருமையையும் பரம்பரைக் கவுரவத்தையும் நிரூபிக்கும் :—

"இப்பொழுதுள்ள திருநெல்வேலி (ராவ்சாகிப் மேடை) தளவாய் திருமலையப்ப முதலியாரவர்கள், தளவாய் முதலியாரின் வழித்தோன்றலாவர். தளவாய் முதலியார்களின் கவுரவமும் பெருமையும் இசையொளியும் **நெல்லைக்குறவஞ்சி**யிலே புகழப்பட்டிருக்கின்றன. இந்தக் குடும்பத்தார் ராஜபதவியிலிருந்ததற்கு அறிகுறியாக, கோயில்களிலும் பொதுஜனக் கூட்டங்களிலும், இக்குடும்பத்தார் முதல் மரியாதைகளைப் பெறுகின்றனர். அன்றியும், பவனிகளில் இரட்டைத்தீவட்டிகளை உபயோகிக்கும் கவுரவம் இக்குடும்பத்துக்கே உரியது. இக்குடும்பத்தார் திருநெல்வேலியில் குடியிருக்கும் வீட்டை, இன்றுமே அரமனை என்பர்"

# திருநெல்வேலி

# தளவாய் முதலியார்

## குடும்ப வரலாறு

---

### முதல் அத்தியாயம்

**விஜயநகர ஸம்ஸ்தானம்—அரியநாயக முதலியார்**

*"தோன்றில் புகழொடு தோன்றுக: அஃதிலார்*
*தோன்றலில் தோன்றாமை நன்று."*

**ஆதிகாலத்திலே கடம்பராஜ்யம் என்றொரு பெரிய** திராவிடராஜ்யம் இருந்தது. இப்பொழு துள்ள மைசூர் ராஜ்யமும் தென்கன்னடம் வடகன்னடம் ஜில்லாக்களும் சேர்ந்த பிரதேசமுழுதும் அதுவியாபித்திருந்தது. கடம்பமன்னர்கள், தொன்றுதொட்டு கி. பி. ஏழாம் நூற்றாண்டுவரை வணங்கா முடி அரசர்களாயும், பின்பு சாளுக்கிய மன்னவர்களுக்கு உட்பட்டவர்களாயும், ஆண்டுவந்தார்கள். கடம்பவம்சத்தைச் சேர்ந்த ஹரிஹரராஜன் என்பவன், கி.பி. 1329-ல், துங்கபத்திரை நதிக்கரையிலே, **ஆனகுந்தி வித்யாநகரம்** என்னும் கோட்டையையும் நகரத்தையும், ஒரு சுயராஜ்யத்தையும், ஸ்தாபித்தான். கருநாடக தெலுங்கர்களான அவன் சந்ததியார், ராயலு அல்லது ராயர் என்ற பட்டத்தை வைத்துக்கொண்டு, அரசாண்டு வந்தார்கள். அவ் வரசர்களில் பேர்போனவனை

நரசிம்மன் அல்லது நரபதி என்பவன், 1490-ல் சிம்மாசனம் ஏறி, தன் ராஜ்யத்தை நான்கு பக்கங்களிலும் பெருகச் செய்தான். தமிழ்நாட்டுச் சேர சோழ பாண்டிய ராஜர்களுக்கும், நாஞ்சி நாட் டரசனுக்கும், வடநாட்டு வேந்தர் பலர்க்கும், அவன் சக்ரவர்த்தியாய் விளங்கினன். அவன் காலமுதல், அவன் ராஜதானிக்கு **விஜயநகரம்** என்றும், இராஜ்யத்திற்கு நரபதி ராஜ்ய மென்றும், பெயர் வழங்கலாயிற்று.

விஜயநகர சக்ரவர்த்திகள், தங்களுக்குக் கீழுள்ள சிற்றரசுகளை மேற்பார்க்கத் தங்கள் பிரதிநிதிகளை ஆங்காங்கு ஏற்படுத்தியிருந்தனர். இப் பிரதிநிதிகளுக்குக் **கர்த்தாக்கள்** அல்லது **துரைகள்** என்று பெயர். பாண்டிய நாட்டிற்கு முதற் கர்த்தா, கம்பண்ண உடையார் என்பவர். இவர் 1372-ல் ஆளத் தொடங்கினர். இவருக்குக் கீழ்ப்பட்டுள்ள பாண்டிய வேந்தர்கள், பெயருக்கு மட்டும்தான் ராஜாக்கள். கம்பண்ண உடையாரின் புதல்வரான அரியண்ண உடையார், 1377-ல் சோழராஜ்ய கர்த்தாவாக நியமிக்கப்பட்டார்.

விஜயநகர மகாராயர்களில் கடைசியானவர், வீரப்ப நாயகர் என்பவரின் புதல்வரும், முந்தின அரசராகிய கிருஷ்ண தேவராயரின் மாப்பிள்ளையுமான, இராமராஜர் என்பவரே. இராமராஜர், 1542 முதல் 1565 வரையில் ஆண்டார். அவர் காலத்தில், சோழ பாண்டிய மண்டலங்களின் வேந்தர், முறையே, வீர சேகரர் என்பவரும், சந்திர சேகரர் என்பவரும். சந்திர சேகரருக்கு, சுந்தர குமாரன் என்ற ஒரு மகன் உண்டு. விட்டலராஜா (1547-1558) என்பவரும், அவர்பின் திம்மப்ப நாயகர் (1559) என்பவரும், சோழராஜ்ய கர்த்தாக்களாய் ஆண்டனர். திம்மப்ப நாயகரும், அவர்புதல்வரான சேவப்ப நாயகரும், 1559 முதல் 1561 வரையில், பாண்டிய மண்டல அரசியலை மேற்பார்த்து வந்தனர்.

சக்ரவர்த்தியின் உத்தியோகஸ்தருள் இருவர், மற்றவர் யாவரிலும் மேம்பட்டு விளங்கினர். இவர்கள், சேனைபதியாகிய விசுவநாத நாயகரும், முதல் மந்திரியாகிய அரியநாயக (அல்லது அரியநாத) முதலியாருமே. விசுவநாதர், கொட்டியம் நாகமநாயுடுவின் புதல்வர். நாகமநாயுடு, சேனையில் படைத் தலைவரும், ஆற்காட்டுக்கும் நாஞ்சிநாட்டுக்கும் நடுவிலுள்ள பிரதேசங்களுக்கு தோசிகானுவுமா யிருந்தவர். அரியநாயக முதலியாரைப் பற்றிப் பின்வரும் விஷயங்கள் நமக்குத் தெரிந்துள்ளன.

**அரியநாயக முதலியார்,** காஞ்சிபுரத்தின் அருகிலுள்ள **மெய்ப்பேடு** என்ற கிராமத்தில், ஓர் எளிய வேளாளர் குலத்தில் பிறந்தவர். கர்ண பரம்பரையாய் வழங்கிவரும் கதைகளுள், அவரைப் பற்றிய ஓர் அதிசய சம்பவம் கூறுவதுண்டு. குழந்தைப் பருவத்தில், ஒரு நாள், அவர் அயர்ந்து தூங்குகையில், ஒரு பெரிய நாகம், அவர் உடம்பைச் சுற்றி வளைந்து கொண்டு, தலைக்குமேல் படமெடுத்து நின்றது. தண்ணீர் மொண்டுவரப் போயிருந்த அவர் தாயார், திரும்பி வந்து அப் பயங்கரக் காட்சியைக்கண்டு, ஆச்சரியமும் நடுக்கமும் அடைந்தாள். பாம்பைத் துரத்தியபின், அவள், சமாசாரத்தைக் கிராமமெங்கும் பரப்பினாள். கிராமத்தார் அநேகர், அவள் மகன் உயர்ந்த பதவிக்கு வருவானென்றனர். அரிய நாயகர், இளம்பருவத்தில் கணிதசாஸ்திரத்தில் அதிகத் தேர்ச்சியும், வில் வித்தையிலும் குத்துச் சண்டையிலும் சாமர்த்தியமும், அடைந்திருந்தார். இவை யெல்லாம், பின்னால் அவர் பெறப்போகும் கீர்த்திக்கு அறிகுறிகளாயின. இத் திறமைகளுடன், அவர், விஜயநகர சம்ஸ்தானத்திற்கு உத்தியோகம்தேடிச் சென்றார். அங்கு, விதிவசத்தால், இராயலுவின் மந்திரிகள் ஊன்றி யோசித்தும் விடைபகர முடியாத

ஓர் அதிநுட்பமான கணக்குக்கு, அவர் எளிதில் விடை பக ரும்படி நேரிட்டது. தவிரவும், இராயரின் ஜாதகத்தைப் பிர யாசை யில்லாமல் அவர் கணித்துவிட்டார். அவர் சாமர்த்தியத் தை விளக்க வேறோர் விநோத சம்பவமும் நிகழ்ந்தது: வால் வரையும் வளர்ந்த கொம்புகளையுடைய எருமையொன்றை, ஓரே வெட்டில் வெட்டிக் கொல்லும்படி, அவர் உபாயம் செய் தனராம். அவர் புத்திசாதுரியத்தை நோக்கி அகமகிழ்ந்த இராயர், அவரைத் தன் அரண்மனைக் கணக்குப்பிள்ளையாக நியமித்தார். காலக்கிரமத்தில், அவர், மந்திரிப் பதவியை அடை ந்து, முதலியார் என்ற பட்டமும், பல்லக்கில் பிரயாணம் செய்யும் உரிமையும், பெற்றனர். அவர் கியாதி யெங்கும் பர விற்று. அவர் ஐசுவரியம் இளம்பிறை போல் வளர்ந்தோங் கியது. ஒரு கலப்பையும் தாற்றுக்கோலும் பொன்னினால் செய்து, அவர் தம் தமக்கைக்கு அனுப்பினராம். மகாராயர் திருமுன்பில் நிகழ்ந்த தன் கலியாணத்தின்போது, அவர், பத்துலக்ஷம் மோகராக்கள் செலவழித்து, முதியவரும் இளை யவருமாகிய நாற்பதினாயிரம் உறவினர்க்கு விருந்தளித்தன ராம். தவிரவும், உறவினர் அவரவர் ஊர்திரும்பியபின், வெவ் வேறிடங்களில் அவர்களுள் நிகழ்ந்த கலியாணங்களுக்கு வேண்டிய பொருளை அவர் உதவினராம்.

---

## இரண்டாம் அத்தியாயம்

### அரியநாத முதலியார் தெற்குத்தேசங்களுக்கு வந்த வரலாறு

" முடிவும் இடையூறும் முற்றியாங் கெய்து
படுபயனும் பார்த்துச் செயல்."

தமிழ்நாட்டு விஷயங்களைச் சிறிது கவனிப்போம். சோழ ராஜன், தனது ஆதிக்கத்தை அதிகப்படுத்த விரும்பி, பெரும் சேனையுடன் பாண்டிய ராஜன் மீது படையெ

டுத்துச் சென்றான். மதுரை, தஞ்சாவூர்களி லுள்ள கர்த்தாக்கள், இவ்விஷயத்தைக் கவனிக்க வில்லை. பாண்டியராஜன், தன் மகனுடன் தப்பியோடி, இராயரைச் சரணமடைந்தான். அவன், இராயர் மந்திரியின் உதவியைக்கொண்டு, வீரசேகரச் சோழன் தனது ராஜ்யத்தை வலிந்து பிடுங்கிக்கொண்டதாகச் சக்ரவர்த்தியிடம் முறையிட்டான். தெற்குத் தேசங்களின் மகாமண்டலேசுரரான கொட்டியம் நாகம நாயகரை, அழைத்து,'உடனே தமிழ் நாடுசென்று, சோழராஜனைத் தண்டித்துப் பாண்டியனுக்கு முடிசூட்டு' மாறு, இராயர் கட்டளையிட்டார். கொர்னல் மகென்ஸி என்பவர் திரட்டிய கையெழுத்துப் பிரதிகளொன்றில், பின்வருமாறு கூறியிருக்கிறது:- "இராயர் கட்டளையை நிறைவேற்றும் பொருட்டு, கொட்டியம் நாகம நாயகர், பாண்டியனைக் கூட்டிக்கொண்டு, தெற்கே சென்று, சோழனைத் தோற்கடித்து, இராஜ்யத்தைக் கைக்கொண்டார். ஆனல், அதற்குள் இறந்துபோன பாண்டியராஜன் மகனான சுந்தரகுமாரனுக்கு முடிசூட்டாமல், நாகம நாயகர், தானே சிம்மாசனத்தை அபகரித்துக்கொண்டு,பின்பு சுந்தரகுமாரனை (ஓராண்டுசென்றபின்) கொல்வித்து, அவன் விதிவசத்தால் இறந்ததாகச் செய்தி அனுப்பிவிட்டார். மகாராயர், நாகம நாயகரின் புதல்வரான விசுவநாத நாயகரையும் அரிய நாயக முதலியாரையும் அழைத்து, பெரும் சேனையுடன் மதுரைசென்று, நாகம நாயகர் இழைத்த தீங்குகளை முறைசெய்யும்படி கட்டளையிட்டார். சக்ரவர்த்தியின் ஆக்ஞைப்படியே, அரியநாயக முதலியார், தளகர்த்தர் யாவரையும் ஒருங்கேதிரட்டி, விசுவநாத நாயகரைக் கூட்டிக்கொண்டு தெற்கேசென்று, பாண்டிய நாட்டின் குழப்பங்களை யெல்லாம் நேராக்கியபின்,விசுவநாத நாயகரையே பாண்டியராஜனக முடிசூட்டினர்."

**மதுரைஸ்தானிகர் வரலாறு** என்னும் நூலில், இவ்விஷயம் சிறிதுமாறிக் கூறப்பட் டிருக்கின்றது. அப்புத்தகத்தில், பாண்டியராஜனின் அம்மான்சேய் ஒருவன் அவனுடன் விஜய நகர சம்ஸ்தானத்திற்குச் சென்றதாகவும், இவர்கள் மதுரைக்குத் திரும்பிவந்தவுடன், கொட்டியம் நாகம நாயகரும் அவர் மகன் விசுவநாத நாயகரும் அரியநாயக முதலியாரும் கூடி, இராயர் கட்டளையின்படி பாண்டியராஜனை முடிசூட்டாமல், விசவநாத நாயகரை முடிசூட்டி, அரியநாயக முதலியாரை அவருடைய சேனுபதி யாக்கிவிட்டனர் என்றும், கூறியிருக்கிறது. தவிரவும், விசுவநாத நாயகர், நாட்டை ஆளத் தொடங்கியபின், 'வருஷத்திற் கொருலக்ஷம் பொன் வருமானம் தரக்கூடிய தெற்கிலுள்ள பிரதேசமொன்றை அவ் வம்மான்சேய்க் களித்து, அவ்வண்ணம் அவன் பாத்தியதையைத் தீர்த்தார்' என்றும், கூறியிருக்கிறது.

டெய்லர் துரை கூறுமாறு, "விஜயநகரராஜ்யம் சீரழிந்தபின், விசுவநாத நாயகரின் ஏகாதிபத்தியமும் கீர்த்தியும், அவருக்குச் சமானராகியவரும் நண்பரும் சேனுபதியுமான அரியநாத முதலியாரின் பிரபலமும், வளர்ந்தோங்கின."

**பாண்டியவம்சாவளி**யில், (விசுவநாதரை முடிசூட்டி) இம்மாறுதலை உண்டாக்கியவருள், அரியநாத முதலியாரே முக்கிய காரணஸ்தர் என்று கூறியிருக்கிறது.

மதுரைச்சீமையின் சரித்திரத்தை ஊன்றிப்படித்துள்ள நெல்ஸன் துரை கூறுவது யாதெனின்:—

"விசுவநாதருடன் மதுரைக்குச் சென்றவருள், அதிபுத்திமானுன ஒருவரைப்பற்றி நான் பேசல்வேண்டும். இவர்தான் ஆர்யநாயக முதலி, அல்லது, சாதாரணப் பேச்சு வழக்கில், அரியநாதர் என்று பெயர்பெற்றவர். இவர்தான் அர

சாட்சியை மாற்றியவர்; பாளையக்காரர்களுக்குக் குலதெய்வமானவர்."

"மதுரை தேசத்தை ஆள நிச்சயித்து, தன் எண்ணத்தை நிறைவேற்ற ராயரின் அனுமதியைப் பெற்றுக்கொண்டு, விசுவநாதர், தனது பெருமுயற்சியைத் தொடங்கினர். முதலில், அவர், தன் நேசராகிய அரியநாயகரின் உதவியைக்கோரினர். அதிர்ஷ்டவசமாக, அரியநாயகர், அவர்கீழே சேனபதியும் முதல் மந்திரியுமாகி உத்தியோகஞ் செய்யச் சம்மதித்தார். உடனே, வழக்கம்போல் **தளவாய்** என்ற பட்டத்துடன், அவர் அவ்வாறே நியமிக்கப்பட்டார்."

"இராயர் சேவையிலுள்ள தளகர்த்தருள் அவர் மிகச் சிறந்தவரென்றும், 1565-ம் ஆண்டில் ராமராஜர் இறந்தபிறகு, அவரே இராய ராகும்படியான சமயம் ஏற்பட்டதென்றும், நமக்குத் தெரியவருகின்றது."

"மதுரைப் பெருங்கோயில் வளாகத்தில் உள்ள ஆயிரக்கால் மண்டபம், அவர் கட்டினதே. உண்மையில், அரியநாதர் தான், இராஜ்யத்திற்கு அதிபதியா யிருந்தாரெனத் தோற்றுகின்றது."

---

## மூன்றும் அத்தியாயம்

### அரியநாயக முதலியாரின் ஆட்சி (1559-1563)

''குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு.''

**மீனாக்ஷியம்மன் சன்னிதியில், விசுவநாத நாயகர் மகுடாபி**ஷேகம்கொண்டு முடிசூட்டப் பெற்றபின், அரியநாத முதலியார், பிரதம மந்திரியாகவும் சேனைகளுக்குத் தலைவராகவும்

சிறந்த சேவகம்புரிந்தார். இரண்டு பதவிகளுக்கு முரிய முத்திரை மோதிரங்களும் அவருக்கே கொடுக்கப்பட்டன.

வடக்கே உட்டாத்தூராலும் வாலிகொண்ட புரத்தாலும், கிழக்கே கடலினாலும், தெற்கே குமரிமுனையினாலும், மேற்கே கோயமுத்தூர், ஈரோடு, தாராபுரம், மேலமலைகளினாலும் எல்லையிடப்பட்ட பிரதேச முழுதும், அவர் தனது ஆட்சியைச் செலுத்தினார். நாஞ்சிநாட் டரசரும் விசுவநாத நாயகரின் ஆதிக்கத்துக் குட்பட்டவரா யிருந்தார்.

சோழ தேச கர்த்தாவாக நியமிக்கப் பட்ட வீரராகவ நாயகர், தன் சுதந்திரத்தை நிலைநாட்டியபின், தஞ்சாவூரைத் தன் தலைநகராகக் கொண்டார். தஞ்சாவூர் ராஜ்யத்திற்கும் மதுரை ராஜ்யத்திற்கும் நடுவிலுள்ள நாட்டுக் கள்ளர்களின் தொந்தரைகளினால், இரண்டு மன்னர்களுக்கும் அடிக்கடி கலகங்கள் நேரிட்டன. இறுதியில், கோட்டைமாற்றிக் கொள்ளும் உபாயத்தினால், சமாதானம் உண்டாயிற்று. மதுரை ராஜ்யத்தைச் சேர்ந்த வல்லம் கோட்டையைத் தஞ்சாவூர் அரசனுக்குக் கொடுத்துவிட்டு, முன்பு சோழ ராஜ்யத்தைச் சேர்ந்திருந்த திருச்சிராப்பள்ளிக் கோட்டையைப் பாண்டிய ராஜ்யத்துடன் சேர்த்துக் கொண்டனர்.

கயத்தாற்றாரிலே, பழைய பாண்டியவமிசத்தைச் சேர்ந்த பஞ்சபாண்டியர்கள், அரியநாயக முதலியாருடன் ஆறுமாதம் கொடும்போர் புரிந்தனர். இரு திறத்தார்க்கும் ஜயாபஜயம் விளைய வில்லை. இறுதியில், இரண்டு போர்வீரர்களைப் பொறுக்கியெடுத்து, அவர்கள் புரியும் போரின் முடிவின்படி நடப்பதாக,இருபக்கத்தினரும் சம்மதித்தனர்.எதிர்ப்பக்கத்து வீரனாகிய பாண்டியத்தலைவன் களத்தில் மடிந்தான். இப் பக்கம் போர்புரிந்த விசுவநாத நாயகர், கடுங்காயங்கள் உற்றனர். உடன்படிக்கையின் படி,பஞ்சபாண்டியர்கள், பெரும்சேனைத்

தலைவராகிய அரியநாயக முதலியாரிடம் தம் தேசத்தை ஒப்புவித்துவிட்டு, வேறு சச்சரவு விளைவிக்காமல், மலைநாடு நோக்கிச் சென்றனர்.

ஜயித்த பிரதேசத்தை நன்கு சீர்திருத்தம் புரிய, அரியநாதர் முயன்றார். முதற்படி, நாட்டின் பாதுகாப்பின் பொருட்டு, பாளையப்பட்டுக்களை அவர் ஸ்தாபித்தார். தேசத்தை எழுபத்திரண்டு பாளையங்களாகப் பிரித்தார்; ஒவ்வொன்றும் ஒரு தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்டது. அபாய காலத்தில், ஒவ்வொரு தலைவனும், மதுரைக் கோட்டையில் அரியநாதர் கட்டியிருந்த எழுபத்திரண்டு கொத்தளங்களி லொன்றைப் பாதுகாக்க வேண்டியது; தன் கீழுள்ள பிரதேச பரிபாலனத்திற்கு, அவனே பொறுப்பாளி; நாயகருக்கு, அவன், திட்டப்படி கப்பம் கட்டவேண்டியது; தவிரவும், அவசியகாலத்தில், யுத்தசேவைக்கு வேண்டிய சில படைகளையும் வைத்திருக்க வேண்டியது. இந்நாளிலே திருநெல்வேலி, இராமநாதபுரம், மதுரை, திருச்சிராப்பள்ளி ஜில்லாக்களி லுள்ள ஜமீன்தார்களின் முன்னோரே, இப் பாளையக்காரர்கள். இந்த ஜமீன்தார்கள், இன்றும் அரியநாதரைத் தம் குலதெய்வமாகக் கொண்டாடுகின்றனர். நெல்ஸன் துரை கூறும் வண்ணம்:— "பாளையக்காரர்கள், தங்கள் குடும்ப ஸ்தாபக ரென்று அவரைத் தொழுகின்றனர். இத் தலைவர்கள், தொட்டியச் சாதியைச் சேர்ந்தவர். தங்களை யாண்ட மதுரை நாயகர்களைப் பின்பற்றி, இவர்களும் "நாயகர்" எனப் பெயர் கொண்டனர். முதலில் இவர் "பாலிகார்கள்" என்ற நாமத்தை உடையோராயிருந்தனர்."

தெற்குப் பிரதேசக் கிராமங்களி லுள்ள தொட்டியர், மறவர், முதலிய சாதியாரைக் கொண்டு, ஊர்க்காவல் புரியும் ஏற்பாடு, இக்காலத்தில்தான் உண்டாயிற்று.

தேசபரிபாலனத்தை நோக்கின், அரிய நாயகர் சில மாறுதல்களைச் செய்திருப்பதாகத் தெரியவருகின்றது. மந்திரி, தளகர்த்தன், என்னும் இரண்டு உத்தியோகங்கள், **தளவாய்** என்ற ஓர் உத்தியோகத்தில், ஒன்ருகப் பிணைக்கப்பட்டன. தளவாய், முதல் மந்திரியாகவும் நாயகர் படைகளுக்குத் தலைவராகவும் விளங்கினார்.

அரிய நாதர், சிறு காலத்தில் மிகப் பெரும் வேலைகளைச் செய்து முடித்தார். திருச்சிராப்பள்ளியைச் சுற்றி, இரண்டு மதில்களுள்ள கோட்டையொன்று கட்டி, அதன் வெளிப்புறத்தில் ஒருநீண்ட அகழியை வெட்டுவித்தார். கோட்டைக்குள் பலவீடுகளையும், ஓர் அரண்மனையையும் கட்டி, தெப்பக்குளத்தைத் தோண்டுவித்தார். காவிரிநதியின் இருபக்கமுமுள்ள காடெல்லாம் வெட்டி நாடாக்கப்பட்டது. நீர்ப்பாசன வசதிகள் ஏற்படுத்தப்பட்டன. இருபுறமும் நூற்றுக்கணக்கான கிராமங்களும் கோயில்களும் தலையெடுத்தன. இக்கோயில்களுள் மிக்கபுகழ்பெற்றது, ஸ்ரீரங்கம் கோயில். விசங்க நாட்டுக்கள்ளர்கள் அடக்கப்பட்டனர். தாமிரவர்ணி நதிக்கரையிலும் இவ்வகைச் சீர்திருத்தங்கள் உண்டாயின. திருநெல்வேலி நகரம் பெரியதாய் மறுபடியும் கட்டப்பட்டது. அரிய நாதர், அதிகத் திரவியம் செலவிட்டு, இரு தீரத்திலுமுள்ள அழகில்லாத பலகிராமங்களை மறுபடியும் அழகுறக் கட்டுவித்ததுமன்றி, பிராமணருக்கு வசதிகளும் செய்து உதவினார். பல கால்வாய்கள் வெட்டி, நீர்ப்பாசனத்தை விருத்திசெய்தார். மதுரை திருநெல்வேலி முதலிய விடங்களில், ஆயிரக்கால் மண்டபங்களைக் கட்டினார். மதுரைப் பெருங்கோயிலில் அவர் கட்டுவித்த ஆயிரக்கால் மண்டபம், இன்னும் அவர் சிறப்பிற்கு நற்சான்ருகும். அவர் ஞாபகச் சின்னமாக, இம்மண்டபத்திலே, குதிரையேறிய வண்ணம், அவரைக்

காண்பிக்குமோர் சிலை, தொண்டர்களால் மலர்மாலை சூட்டித் தொழப்படுகின்றது.

**விசுவநாத நாயகரும் அரியநாத முதலியாரும் ஸ்தாபித்த பாளையங்களின் அட்டவணை.**

1. மலையாளம் (திருவாங்கூர்) — நாஞ்சி நாட்டரசர்.
2. அரியாத்தூர் — மாளவராயர் (அல்லது நயினார்.)
3. துறையூர் — இரெட்டியார்.
4. இலுப்பையூர் — காமாக்ஷி நாயக்கர்.
5. குளத்தூர் — இராமசாமித் தொண்டமானார்.
6. கூடலூர் — பெரும்பூர் — திட்ட குட்டித்தேவர்.
7. மருங்காபுரி — பூச்சி நாயக்கர்.
8. நத்தம் — லிங்கம நாயக்கர்.
9. குமார பாளையம் — அரங்கைய நாயக்கர்.
10. தோகைமலை — வாசவப்ப நாயக்கர்.
11. பிள்ளை முழுங்கி — மூர்த்தி (அல்லது முத்தைய) நாயக்கர்.
12. இராமகிரி — சாமி நாயக்கர்.
13. பழனி — சின்னம நாயக்கர்.
14. விருபாக்ஷிக்குப்பம் — அழகிரி நாயக்கர்.
15. கண்ணிவாடி — அப்பைய நாயக்கர்.
16. ஆயக்குடி—கொண்டம் நாயகர்.
17. (கொண்டா) மாம்பாறை — * * * நாயக்கர்.
18. இடையக்கோட்டை — (வல்லகொண்டம நாயக்கர் ?)
19. ஆயித்தூர் — வல்ல கொண்டம நாயக்கர்.
20. மடுவூர்(அல்லது வடுக்கூர்)—வல்ல கொண்டம நாயக்கர்
21. கொங்கரையன் கோட்டை — வாலமூர்த்தி நாயக்கர்.
22. மருவூற்று — (அம்மைய நாயக்கர்?)
23. எழுக்கலாபுரம் — (அம்மைய நாயக்கர் ?)
24. தவசிமடை — அம்மைய நாயக்கர்.
25. தோம்பத்தூர் — ... ... ...
26. தோட்டியான் கோட்டை—திருமலை கண்டம நாயக்கர்.
27. மூங்கிலணை — (பூசாரி நாயக்கர் ?)

28. பெரியகுளம் — இராமபத்திர நாயக்கர்.
29. திருமலை — பொடி நாயக்கர்.
30. ஆரவட்டம் — * * * நாயக்கர்.
31. கோம்பை — அப்பாச்சி நாயக்கர்.
32. தேவாரம் — * * * நாயக்கர்.
33. (கம்பம் கூடலூர்) — இராசாக்க நாயக்கர்.
34. வளையப்பட்டி — (வாக்காமி ?) நாயக்கர்.
35. ஊத்தப்ப நாயக்கனூர் — தொட்டப்ப நாயக்கர்.
36. கவுண்டன் கோட்டை— கவுண்டர் (அல்லது காமைய நாயக்கர்.)
37. வெள்ளிக்குண்டம் — கவுண்டர் (அல்லது காமைய நாயக்கர் ?)
38. கச்சைகட்டி — காமைய நாயக்கர்.
39. ஏழாயிரம் பண்ணை —"ஆண்டுகொண்ட வன்னியனார்."
40. சிவகிரி — வரகுணராம வன்னியனார்.
41. எட்டையாபுரம் — எட்டப்ப நாயக்கர்.
42. பாஞ்சாலன் குறிச்சி — கட்டப்பொம்ம நாயக்கர்.
43. சேத்தூர் — திருவண்ணநாதத் தேவர்.
44. கொல்லார்பட்டி — கங்க நாயக்கர்.
45. கொடிக்குளம் — மூவராயர் (அல்லது மூவரையன்)
46. பேரையூர் — * * * நாயக்கர்.
47. சப்பத்தூர் — * * * நாயக்கர்.
48. சந்தையூர் — * * * நாயக்கர்.
49. ஏழுமலை — (அல்லது ஏரமலை) * * * நாயக்கர்.
50. மன்னார்கோட்டை — * * * நாயக்கர்.
51. ஆற்றங்கரை — பெத்தாளி நாயக்கர்.
52. அழகாபுரி — இரட்டைக்குடை (அல்லது இரட்டைக் கோட்டை வன்னியனார்.)
53. நாகலாபுரம் — இரவப்ப நாயக்கர்.
54. குருக்கள்பட்டி — (அல்லது குறுக்குவெட்டி) அழகத்தேவர்.
55. ஊற்றுமலை — மருதப்பத் தேவர்.
56. சொக்கம்பட்டி — * * * தேவர்.

57. நெக்கட்டன் செவ்வல்— * * * தேவர்.
58. கடம்பூர் — வன்னியனார்.
59. மணியாட்சி — தேவர்.
60. மடுவக்குறிச்சி — * * * தேவர்.
61. தலைவன் கோட்டை — * * * தேவர்.
62. சிங்கம்பட்டி — சேது ராயர்.
63. ஊர்க்காடு — சேர்வைக்காரர்.
64. — எந்தில நாயக்கர்.
65. — ஆண்டிச்சியம்மாள்.
66. தாழைமலை — இராமசந்திர நாயக்கர்.
67. தாராமங்கலம் — கெட்டி முதலியார்.
68. குருவிக்குளம்—பொம்மசாணி பெரிய வீரப்பநாயக்கர்.
69. இராஜபாளையம் — * * * ராஜா.
70. மேல் மந்தை — * * * நாயக்கர்.
71. ஆலங்குளம் — (அல்லது ஆரகுளம் அல்லது அருங்குளம்) நாயக்கர்.
72. செந்நெல்குடி — * * * நாயக்கர்.
73. பாலாட்சி — * * * நாயக்கர்.

வில்ஸன் துரை பாளையங்களின் தொகையைப் பற்றிக் கூறுவது யாதெனின்:—"கொள்ளையினாலும் வலிமையினாலும் வாழ்ந்த இத் தலைவர்கள், திருநெல்வேலி, திருச்சிராப்பள்ளி ஜில்லாக்களில் எழுபத்திருவர் இருந்ததாகத் தமிழ் அட்டவணைகள் காண்பிக்கின்றன. ஆனால், இத்தொகை, அடிக்கடி மாறுதலையடைந்ததெனவும், இவர்களுள் ஆதிக்கம் செலுத்தும் ஒருவர் பெருகத் தொகைகுறைந்து, மற்ற வேளைகளில் அதிகரித்த தெனவும், தோற்றுகின்றது."

இராமநாதபுரம் பாளையம் பிற்காலத்தில், 1605-ம் ஆண்டில், முத்து கிருஷ்ணப்ப நாயகரால் ஏற்படுத்தப்பட்டது. சிவகங்கை ஜமீனும், புதுக்கோட்டை அரசும், இப்பாளையத்தினின்றும் உதித்த கிளைகளே.

பாளையப்பட்டு ஏற்பாட்டைப்பற்றியும், "பாலிகார்" என்ற சொல்லின் உற்பத்தியைப் பற்றியும், கால்ட்வெல் துரை எழுதுவதாவது :—

"ஜெனரல் வில்க்ஸ்' **பாலிகார்** என்ற பட்டம், ஜனங்களைப் பயமுறுத்தும் பொருட்டுப் பக்கத்துப் பிரதேசங்களில் நிலைநாட்டிய வடுகத்தலைவர்களுக்கு, விஜயநகர அரசர்களால் அளிக்கப்பட்ட தெனக் கூறுகிறார். தமிழ்ச்சொல், **பாளையக்காரன்** ; பொருளென்னவெனில், சிப்பாய்ப்பாளையத்தைக் கொண்டவன் என்பதே. பிறகுதான், ஒரு பிரதேசத்தைக் குத்தகையாய் எடுத்தவனென வழங்கிற்று. ஆனால், ஆங்கிலேயர், 'பாலிகர்' என்ற சொல்லை, பாளையக்காரனென்ற தமிழ்ச் சொல்லினின்றும் கொள்ளவில்லை. அதே பொருள்கொண்ட தெலுங்குச் சொல், **பாலிகாடு**; கன்னடச்சொல், **பாலிகாரா**; இவற்றினின்றே கொண்டனர். காருவும், காராவும், காரனுக்குச் சமானம். அவ்வாறே ஆங்கிலேயர் "பாலம்" (பாலிகாரின் பிரதேசம்) என்ற சொல்லை, "பாளையம்" என்ற தமிழ்ச் சொல்லினின்றும் கொள்ளாமல், தெலுங்குப் "பாலமு" வென்ற சொல்லினின்றே கொண்டதாகத் தோற்றுகின்றது?"

---

## நான்காம் அத்தியாயம்

### தலைக்கோட்டை யுத்தத்தில் அரியநாதர் புரிந்த சேவையும் பின்பு விஜயநகர ராஜ்யத்தின் நிலைமையும்

*"காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்*
*ஞாலத்தின் மாணப் பெரிது"*

**விசுவநாத நாயகர் மடிந்தபிறகு, 1594-ம் ஆண்டில்,** அவர் மகன் கிருஷ்ணப்ப நாயகர், அரியநாதரின் முயற்சியால்,

உடனே மதுரைக் கர்த்தாவாக்கப்பட்டார். அக்காலத்தில், பீஜபுரம், ஆமதுநகரம், கோல்கொண்டா முதலிய தேசங்களின் அரசர்கள், விஜயநகரத்து இராமராஜரை எதிர்த்துப் பெரும் சேனைதிரட்டிப் போருக்கு வந்தனர். இராமராஜர், தெற்கிலுள்ள அரியநாதரின் உதவியை நாடினார். முகம்மதியரின் கொடும் பகையினின்றும் ராஜ்யத்தை விடுவிக்கப் பேராவக் கொண்டு, அரியநாதர், பெரும் படையுடன் விஜயநகரம் சென்றார். ஆனால் எதிரிகளின் சேனாபலத்தைச் சக்கிரவர்த்தியால் வெல்ல முடியவில்லை. இராமராஜர், சண்டையின் மத்தியில் மரணகாயமுற்று வீழ்ந்தபொழுது, அரியநாதரையழைத்து, தானிறந்தபின் தனது சுவீகார புத்திரராகஅவரை யாவரும்பாராட்ட வேண்டுமென்று கூறி, தனது ராஜ்யத்தை அவரிடம் ஒப்புவித்து, எதிரிகளை வெல்லும்படி அவரை வேண்டிக்கொண்டு, பிராணனைவிட்டார். யுத்தம் முடிந்தபின், அரியநாதர், இராயர் கட்டளையின் வண்ணம் தான் மகுடம் சூடும் உசிதத்தைப்பற்றித் தனது உற்றார் உறவினரை வினவினார். அவர்களும், அரியநாதரின் குடும்பப் புரோகிதரும், சிம்மாசனம் ஏறவேண்டாமென அவரைத் தடுத்தனர். ஆகையால், அவர், இறந்த ராயரின் சகோதரராகிய திம்மராஜரே முடிசூட அனுமதித்தார். இந்தத் திம்ம அல்லது திருமலைராயர், ஒருகாலத்தில் பெயர்பெற்றதும் இப்பொழுதுசீரழிந்ததுமான விஜயநகரத்தை விட்டுவிட்டு, தற்காலத்து அனந்தபுரம் ஜில்லாவிலுள்ள பெனுகொண்டா மலையில் ஒரு கோட்டை கட்டி, அதையே தன் தலைநகராகக் கொண்டார். இராஜ்யத்தின் மற்றப்பிரதேசங்கள், மதுரை, தஞ்சாவூர், மைசூர் கர்த்தாக்களுக்குள் பிரிக்கப்பட்டன. நமது கதாநாயகரான அரியநாதரோ, மூன்று மாகாணங்களுக்கும் தளவாயாக, முன்போல் உத்தியோகம் புரிந்து வந்தார்.

கர்நாடகப் பிரதேச விஷயங்களை, 1600-ம் வருஷம் வரையில், அரிநாயக முதலியார் மேற்பார்த்துவந்தார். வடுகர் ஆளுகையை ஸ்திரப்படுத்த அவருதவி வேண்டியிருந்ததனால்தான், தன் இறுதிக் காலத்தில் முகம்மதியரால் எதிர்க்கப்பட்ட சந்திரகிரி அரசருக்கு, அவர் சகாயம்புரிய முடியவில்லை. நெல்ஸன் துரை கூறும் வண்ணம்:—

"அரியநாதர் இறந்தபின், மதுரை நாயகர்கள், அதுவரையில் நாள்தோறும் உட்பட்டிருந்த மேற்பார்வையினின்றும் விடுவிக்கப்பட்டனர். வேங்கடபதி ராயர், 1613-ல் சிம்மாசன மிழந்தோ, இறந்தோ, பட்டார். ஆனால் அவர் இறப்பதன்முன், மதுரையின் மேல் அவருக்கிருந்த பிடி அற்றுவிட்டது. ஏனெனில், 1609-வருடச் சிலாசாஸனமொன்றில், மதுரை நாயகரின் பெயர் காண்கின்றதே யொழிய, சக்கரவர்த்தி யொருவர் இருப்பதாகவும் ஊகிக்க இடமில்லை. ஆகையால், பெனுகொண்டா வமிசத்தின் ஆதிக்கம், சிலகாலம்தான் மதுரை நாயகர்களால் ஒத்துக்கொள்ளப்பட்டதெனத் தெரிகின்றது."

---

## ஐந்தாம் அத்தியாயம்

### விஜயநகர ராஜ்யம் அழிந்தபின் அரிய நாதரின் பரிபாலனம்

"கற்றதனா லாய பயனென் கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்?"

அரியநாயக முதலியாரின் பரிபாலனம் நான்கு நாயகரின் ஆளுகையளவு நீடித்திருந்தது. விசுவநாதருக்குப் பிறகு, அவர் புத்திரர் கிருஷ்ணப்பநாயகர், 1564 முதல் 1572 வரை ஆண்டனர்; அவர் மகன் வீரப்ப நாயக்கர், 1572 முதல் 1595 வரை ஆண்டனர்; அவர் மகன், குமார கிருஷ்ணப்ப நாயகர்,

1595 முதல் 1601 வரை ஆண்டார். ஹீவெல்துரை கூறிய படி:—"இவர்கள் அரியநாதரால் மகுடம் சூட்டப் பெற்று, அவர்கீ ழிருந்தே ஆண்டனர். உண்மையில் அரசர் அரிய நாதரே." நெல்ஸன் துரையும் இவ் வபிப்பிராயமே கொள்கிறார். அரியநாதரின் இச்சையை எதிர்த்து ஒருகாலமும் நாயகர்கள் நடக்கவில்லை என்று, அவர் கூறுகிறார்.

1566-1567-ம் ஆண்டில், அரியநாதர், மதுரைக்குச் சில மைல்தூரம் கிழக்கி லுள்ள சோழவந்தான் என்ற கிராமத்தில், ஒரு பசுமையான நிலத்தில், தன் உறவினர்களைக் கொண்டுவந்து குடியேற்றி வைத்தனர்.

இவர்கள், காஞ்சிபுரத்திற் கடுத்துள்ள பெருநாட்டினின் றும் வந்தனர். இக் குடியேற்ற நாட்டில், அவர்கள் சௌகரியத்தின்பொருட்டும் பாதுகாப்பின் பொருட்டும், முன்னூறு வீடுகளும், "முதலியார்கோட்டை" யெனப் பெயர்கொண்ட ஒரு கோட்டையும், கட்டப்பட்டன. தவிரவும், தனது குருவுக் கென்று அரியநாதர், ஒரு மடமும் வீடும் கட்டுவித்தார். இப் புது நகரத்திற்குப் போதியஅளவு, அடிமைகளும் பறையர்களும் சிற்பிகளும் குடியேற்றப்பட்டனர். குடியேறினவரின் சௌகரியத்துக்கான எந்த விஷயமும் மறக்கப்படவில்லை. இவ்விதமான புதுக்குடிகள், நகரி, திருமங்கலம், புத்தனேரி, முதலிய கிராமங்களிலும் ஸ்தாபிக்கப்பட்டன.

அரியநாதர், மதுரையைத் தனது இருப்பிடமாகக் கொண்டதனுல், நாட்டிற்குப் பல நன்மைகள் விளைந்தன:— நாட்டுக்கு விரோதமான துரோகிகளின் எண்ணங்க ளெல்லாம் வீணாயின. இராஜாங்கத்தை எதிர்த்த சதி சூழ்ச்சிக ளெல்லாம் முறிபட்டன. தேசம் வளமையையும் சாந்தத்தையும் அடைந்தது. இத் தளவாய் - மந்திரி, மதிற் சுவர்களையும் கல்லரண்களையும், திருச்சிராப்பள்ளி, மதுரை, பாளையங் கோட்டை முதலிய விடங்களில் கட்டுவித்தார்.

இப்பொழுது பெனுகொண்டாவிலாண்ட அரசர்களின் வம்சாவளியைச் சிறிது நோக்கியபின், அவ் வரசர்களுக்கும் மதுரை ராஜ்யத்திற்குமுள்ள சம்பந்தத்தைக் கவனிப்போம்.

திருமலைராயர் 1566 முதல் 1572 வரையிலும், அவர் மகன் 1572 முதல் 1585 வரையிலும், ஆண்டனர். பிறகு, அம் மகனின் சகோதரராகிய வேங்கடபதிராயர் அரசராயினர். இவர், முகம்மதியர் தன்னை வருத்தியதால், 1592-ல், தற்கால வட ஆற்காடு ஜில்லாவிலுள்ள சந்திரகிரிக்குச் சென்றொளித்தார். பிறகு, மாகாண கர்த்தாக்களை அடக்கியாள முடியாமற்போக, அரியநாதர், கர்த்தாக்களைத் தனியே விட்டுவிடும்படி, இவர்க்குப் புத்திபோதித்தார். இவ்வண்ணம் கர்த்தாக்களால் சுதந்திரம்பெற்ற முக்கிய மாகாணங்கள், பின்வருவன:—

| | | |
|---|---|---|
| பெனுகொண்டா | — | சின்னப்ப நாயக்கர் |
| ஸ்ரீரங்கபட்டணம் | — | திருமலைராயர். |
| சென்னப்பட்டணம் | — | ஜெங்கதேவராயர் |
| செஞ்சி | — | கிருஷ்ணப்பராயர். |
| தஞ்சாவூர் | — | அச்சுதப்பராயர். |
| மதுரை | — | குமாரகிருஷ்ணப்பநாயகர். |

தனது அந்திம காலத்தில், தளவாய் அரியநாத முதலியார், செல்வாக்கற்ற சக்கரவர்த்தியின் காரியஸ்தராக, மதுரைச் சீமையின் ராஜ்யபரிபாலனத்தை மேற்பார்த்து வந்தார். பிஷப் கால்ட்வெல் துரை இச் சந்தர்ப்பத்தில் கூறும் சொற்கள் கவனிக்கற்பாலன: "நாயகர்கள், ஒரு காலமும் மதுரை அரசர்கள் என்ற பட்டம் கொள்ளவில்லையென்பதை, நாம் மறக்கலாகாது. அவர்கள் இராயலுவின் காரியஸ்த ரெனப் பெயர் கொண்டனரே யொழிய, வேறொன்று மில்லை. தங்கள் சக்கரவர்த்திக் குரிய திறையைமறுத்து,

அவருடன் போர்புரிந்த காலத்தும், அவர்கள் வேறு உயர்ந்த பதவியை விரும்ப வில்லை. இராஜ சின்னங்களாகும் மரியாதைகளையும் அதிகாரங்களையும் அவர்கள் கைக்கொண்டன ராயினும், ஏதோ பரம்பரையான விசுவாச வுணர்ச்சி, அவர்கள் பதவிக் கேற்ற நாமத்தையும் கொள்வதைத் தடுத்தது."

மதுரை விஷயங்களைப்பற்றி இங்கே சிறிது கூற வேண்டும். அரியநாத முதலியார் வடதிசை சென்றிருந்த சமயத்தில், பரமக்குடியிலே ஒரு பாளையக்காரன், நாயகர் ஆட்சியினின்றும் தப்பும் பொருட்டு, எதிர்த் தெழுந்தான். ஆனால், அவன் விரைவில் அடக்கப்பட்டு, உயிரிழந்தான்.

இவ்வாறு புகழ்பெற்ற ராஜதந்திரியான அரியநாதர், மதப்பற்றிற்கும் கியாதிபெற்றவர். சிவராத்திரிப் பண்டிகைக் கென்று, அவர் 12000 மோஹராக்கள் செலவழித்தனராம். கடவுளால் ஒரு கனவில் தமக்கு ஆக்ஞாபிக்கப்பட்ட வண்ணம், அவர், ஒரு பள்ளியறைக்கட்டளை ஏற்படுத்தினர். கோயிலுக்குப் பலஆபரணங்கள் அளித்தார். கோயிலில் அவர் கட்டிய கட்டடங்களுள் மிகப் பெயர்பெற்றவை, ஆயிரக்கால் மண்டபமும், அறுபத்துமூவர் மண்டபமுமாம். தவிரவும், ஏழைகளுக்கு ஓர் அறச்சாலையும், வன்னியடியும், பூஞ் சோலையும், முருகேசற்கு வெள்ளியாசனமும் அவர் உதவியதை, **திருப்பணிமாலை**யில் பின்வருமாறு சிறப்பிக்கப்பட் டிருக்கிறது.

"அருமா தவஞ்செய் அறுபத்து மூவ ரணிமண்டபம்
மருவாருஞ் சோலை யறச்சாலை மண்டபம் வன்னியடி
முருகேசன் சொக்கற்கு வெள்ளிச்சிங் காதனமுற்றுஞ்செய்தான்
வருமா லரிய நயினு முதலி மதிமந் திரியே."

(1600) சர்வாரி வருஷம், சித்திரைமாதம், ஏழாந்தேதியன்று, "அரியநாயக முதலியார், முத்திரை மோதிரங்கள்

இரண்டையும் தன் அரசர்க் களித்தபின், நாட்டைப் பல்வ ளம் நிறைந்த நிலைமையில் விட்டுவிட்டுப் பரமபதம் அடைந் தார்."

புகழ்பெற்ற இச் சேனாபதியின் ஜீவியசரிதையை, முறை யே, டெய்லர் துரை, நெல்ஸன் துரை இவர்களின் சொற் களைக்கொண்டு முடிப்போம்:—"அரியநாதமுதலியாரின் கீர்த் தியளவை விசாரித்தால், அது அளவற்றதென்றே கூறவேண் டும். முடியரசர்களும் அவருக் கிணையாகார்."

"தள்ளாடிக்கொண்டிருந்த இராஜாங்கம், அரியநாதரின் தாயொக்கும் அன்பினாலும் சிரத்தையினாலுமே ஸ்திரப்பட்ட தென்பதை, நாம் மறக்கலாகாது. அவர் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் மனத்தில் எழும் மரியாதையும் பயமும் இல்லா விடின், நாட்டின் விரோதிகள், விரைவில் நாட்டைச்சிதைத் துக் கலகத்தை விளைவித்திருப்பர். அவர் நீண்டாயுளாய் வாழ்ந்தாராயினும், ஒருகணமேனும் குறைந்து வாழ்ந்திருந் தால், நாட்டின்கதி அதோகதிதான். அவர் மாளும்பொழு தோ, நாயகரின் ஆளுகைக்குத் தீங்கு விளைக்க, விரோதி எவ னுமே யில்லை."

---

## ஆறும் அத்தியாயம்

### அரியநாதமுதலியார்க்குப் பின்வந்தவர்

**அரியநாயகரின் மகன் காளத்திநாத முதலியார்,** அவர் உத்தியோகத்தை அவர்க்குப் பின் செய்து வந்தார். இவர் குமாரகிருஷ்ணப்ப நாயகரின் ஆட்சியிலும் (1600-1602), பிறகு சின்ன விசுவப்ப நாயகரின் ஆட்சியிலும் (1602-1608), இராஜ்ய பரிபாலனம் செய்தார். இவர் "தென்பாகைக் கிறையவன்" என்று பெயர்பெற் றிருந்ததனால், இவர் பரி

பாலனம் முக்கியமாய்த் தென்னாட்டைச் சார்ந்ததெனத் தோற்றுகின்றது. மதுரையில் அம்மனுக்கு ஏழுநிலைக் கற் கோபுரம் கட்டியதன் பொருட்டு, பின்வரும் கவிகளில் இவர் சிறப்பிக்கப்பட் டிருக்கிறார்.

"எண்ணிய வீரீச் சுரமும் நற் காளத்தி யீச்சுரமும்
வண்மை யரிய நயினு முதலி வகுத்தமைத்தான்
அண்ண லரி யீச் சுரம் வகுத் தானரி யான் புதல்வன்
புண்ணியத் தால் வந்த காளத்தி நாதன் புகழ் வள்ளலே."

"தென்னவ னின்றருள் அம்மைக்குப் பங்குனித் தேர்த்திருநாள்
சந்நிதி யேழ் நிலைக் கோபுரங் கற்படைத் தானமைத்தான்
மன்னு மரிய நயினு முதலி மகிழுமைந்தன்
இன்னருட் காளத்தி நாதன் றென் பாகைக் கிறையவனே."

[திருப்பணிமாலை]

காளத்தி நாதரின் பின், அவர் புத்திரர் நயினு முதலியாரும், வீரராகவ முதலியாரும், இரண்டாவது முத்துகிருஷ்ணப்ப நாயகரின் ஆளுகையில் உத்தியோகம் செய்தனர்.

மதுரையில் துர்க்காதேவிக்கு மண்டபம் கட்டியதால், நயினுமுதலியார் புகழ்பெற்றார் :—

கொற்ற வராகி முடிசூடும் சொக்கர் பொற் கோயிலுள் வாழ்
கற்றவர் போற்றுந்துர்க் காதேவி மண்டபம் கட்டினன்கார்
உற்றிரு தண்டலை சூழ் கடல் வாழ் கூட லூருடையான்
நற்றவ மென்ன வரும்படி யானயி னு மகிழ்ந்தே"

[திருப்பணிமாலை]

கால்ட்வெல் துரை கூறும் வண்ணம், வீரராகவ முதலியார், நாயகரின் சேவையி லிருந்தவருள் மிகப் பெயர்பெற்ற தளகர்த்தர். திருநெல்வேலிச் சிலாசாஸனங்கள் பல, அவர் பெயரைக் குறிக்கின்றன. அவரும் மதுரைக் கோயிலுக்குப் பல மண்டபங்கள் கட்டுவித்தார் :—

"திருவளர் கூடலில் முத்தனக் குந் திருக் கோபுரஞ்சீர்
உருவளர் வள்ளக் கலயமும் நாயகர்க் கோக்கு செம்பொற்
குருவளர் மண்டபம் முன்னுளி லுள்ள குறையுஞ்செய்தான்
தருவளன் மாவைப் பதிவீர ராகவ சற்குணனே"—

(திருப்பணிமாலை)

தாமிரவருணியின் மேற்குத் தீரத்தில், திருநெல்வேலிக்கும் பாளையங்கோட்டைக்கும் நடுவி லுள்ள **வீரராகவபுரம்** என்ற கிராமம், இவர் பெயரால் வழங்குவதே.

இவருக்குப் பின்வந்த கடந்தை முதலியார், திருமலை நாயகரின் ஆட்சியில் (1623-1659), உத்தியோகம் செய்தார். இம் முதலியார், 'மஹிபதி' (அல்லது, அரசர்) என்ற பெயரும் பெற்றனர். இவர், மதுரையில், மீனாக்ஷியம்மன் சந்நிதியில் **முதலிப்பிள்ளை மண்டபம்** கட்டுவித்தது, பின்வருமாறு சிறப்பிக்கப் படுகின்றது.

"நற்று ரணிபுக ழங்கயற் கண்சன் னிதிவிளங்கப்
பொற்று மரைக்கு வடகீழ்ப் புறத்தினிற் போற்றியினிக்
கற்றூர்க ளெண்ண வொருதிரு மண்டபங் கட்டுவித்தான்
வற்றுத கீர்த்திக் கடந்தை முதலி மகிபதியே."

(திருப்பணிமாலை)

---

## ஏழாம் அத்தியாயம்

### நயினத்தை முதலியார்—சின்னத்தம்பி முதலியார்

**நயினத்தை முதலியார் கடந்தை முதலியாரின் குமாரர்.** அவருக்குப் பின் தளவாய் உத்தியோகத்தை வகித்தார். இவருக்குச் "சயதுங்கர்" என்ற பட்டமும் உண்டு. இவர் கியாதி பெற்ற திருமலை நாயகர் ஆட்சியின் பிற்பாகத்தில் உத்தியோகம் செய்தார். மதுரையி லிருந்த காலத்தில், கோவில் தெருக்கு ஒரு மண்டபமும், வேறு திருப்பணிகளும் செய்து சிறப்பித்தார் :——

"சீரேற்ற சொக்கற் கபிடேகக் கட்டளை செய்து செம்பொன்
வாரேற்ற பூண் முலை அங்கயற் கண்ணிக்கு மாசித்திருத்
தேரேற்ற மண்டபம் செய்தனன் தம்பிச் சதீரன் செல்வன்
தாரேற்ற மண்புய வேள் நயி ஞத்தை சயதுங்கனே".

இவர் காலத்தில்தான், திருநெல்வேலி ஜில்லா, தனி யான ஒரு மாகாணமாகப் பிரிக்கப்பட்டது இவரே அம் மாகாணத்தின் முதல் தலைவராய் நியமிக்கப்பட்டார். திருமலை நாயகரின் ஆட்சியில் இராஜ்யம் மிகப்பெரியதாய்விட்டதால், இம் மாறுதல் அவசிய மாயிற்று. நாயகர் இறந்த பொழுது, அவர் ஆண்ட பிரதேசம், தற்காலத்துத் திருச்சிராப்பள்ளி, மதுரை, (இராமநாதபுரம், சிவகங்கை ஜமீன்கள் கூடியது) திருநெல்வேலி, கோயமுத்தூர், சேலம் ஜில்லாக்களும், புதுக் கோட்டையும், திருவாங்கூரி லோர் பாகமும், அடங்கியது. தலைநகரம் மதுரையி னின்று திருச்சிராப்பள்ளிக்கு மாறிய தும், திருநெல்வேலி மாகாணம் உண்டாவதற் கோர் காரண மாயிற்று.

பிற்காலத்தில் தளவாய்த்தலைவர் "குத்தகைக்காரர்" என்ற பெயருடையவ ரானார். அக்காலத்தில் வசித்த புல்லர்டன் துரை எழுதும் வண்ணம் :— "ஏகாதிபத்யத்திற் குரிய சகல சக்திகளும் மரியாதைகளும் அவருக்குக் கொடுக்கப்பட்டன. வருமானத்தில் ஒருபங்குக்கே, அவர், நாயகருக்குக் கணக்குக் கூறவேண்டியது. நாணயமாற்று வீதத்தை, அவர், தன் இஷ்டப்படி ஏற்றி யிறக்கலாம். தானியவிற்பனையை அவர் நிறுத்தி விடலாம்; அல்லது, அநியாய விலைக்கும் விற்கலாம். ஜனங்கள் செலவில் சேவகர்களை வைத்துக்கொள்வது தவிர, அவசிய மென்று நினைக்கின்ற காலத்தில், படைகளையும் திரட்டலாம். இவையன்றி, வேறு அமுல்களும் அவரதிகாரத்தில் அடங்கி யுள்ளன. அவர் ஆதிபத்யம் எவ்வளவு வலிமையுள்ளதாக

விருந்ததெனில், பிற்காலத்தில், தளவாய் முதலியார் வமிசத்தார் "திண்டு திருப்பி அதிகாரம்" செலுத்திவந்தன ரென்று ஒருவசனம் வழங்க லாயிற்று. அதாவது, தளவாய் அதிபதி தனதாசனத்தை ஒரு திக்கு நோக்கித் திருப்பியபோது, அவர் உத்தியோகஸ்தரும் சேவகர்களும், மாகாணத்தில் அத்திக்கு விஷயங்களைக் கவனிக்க விரும்புகிருரென் றறிந்து, அப் பாகத்துக் குரிய பட்டாமணியக்காரர் முதலியோர், கணக்குக்களுடன் அரமனைக்கு ஓடிவருவர். இவ்விதமாகவே சண்டை சச்சரவுகளும் தீர்க்கப்பட்டன. ஸத்தியமங்கலம் (கோயமுத்தூர்) முதலிய விடங்களில், வேறு தளவாய்கள் இருந்தன ரெனினும், இத் திருநெல்வேலி தளவாய்கள் தாம் மிக்கவலிமையுள்ளவர்; திருமலை நாயகர் சேவையி லுள்ள மற்ற உத்தியோகஸ்தர்களைவிட, திருநெல்வேலித் தளவாய் மேம்பட்டவர். 18-ம் நூற்றுண்டிலிருந்த ஆங்கில இராணுவ வீரர்களும் திருநெல்வேலித் தளவாய்களைத் "தலைமைக் குத்தகைக்காரர்" எனக் கூறலாயினர்.

கர்ணபரம்பரைக் கதைகளால், தளவாய் முதலியார் வமிசம், திருநெல்வேலியில், முத்து திருமலை நாயகர் ஆளுகையில், ஸ்தாபிக்கப்பட்டதெனத் தெரிகிறது. நாயகரின் சேனுபதி தென்மாகாணத்தைப் பரிபாலனம் செய்யவேண்டியிருந்ததால்தான், மந்திரி சேனுபதி உத்யோகங்கள், இராமப்பையன், சின்னக் கதிர் நாயக்கர், வடமலையப்ப பிள்ளையன், இரகுநாத சேதுபதி முதலியவர்களால் வகிக்கப்பட்டன. ஆர்ம் துரையின் புத்தகத்தில்:— "மதுரை, திருநெல்வேலிப் பிரதேசங்களை, 100 வருஷமாய்க் குத்தகையெடுத்து வந்த தளவாய்க் குடும்பத்தார், அக்காலத்திற்குள் அந்தப் பிரதேசத்தில் அடங்கிய பூமி யவ்வளவையும் குத்தகைக் கெடுத்ததுமன்றி, அதில் ஒவ்வொரு பாகத்தின் பூசாரகுணங்களையும் நன்கறிந்திருந்தனர்" என்று, எழுதியிருக்கின்றது.

முத்து திருமலையப்ப நாயகரின் மகன் முத்து 'அழகாத்திரி நாயகர் ஆளுகையிலும், அவர்க்குப் பின், அவர் சுவீகார புத்திரர் சொக்கப்ப நாயகர் ஆளுகையின் முற்பாகத்திலும், தளவாய் நயினாத்தை முதலியார், திருநெல்வேலியில் உத்தியோகம் செய்தார்.

சொக்கப்ப நாயகரின் ஆட்சியில், அவருக்கும் தஞ்சாவூர் நாயகருக்கும் ஒரு கடும்போர் விளைந்தது. தளவாய் சின்னத் தம்பி முதலியார், தளகர்த்தராகச் சொக்கப்பருக்குச் சேவை புரிந்தது மன்றி, தஞ்சாவூர் மாகாணத்தை வென்று கியாதி பெற்றார். ஆகையினால், நயினாத்தை முதலியார் இறந்தபிறகு, அவருக்குத் திருநெல்வேலி மகாணாதிபத்தியம் கொடுக்கப் பட்டது.

சின்னத்தம்பி முதலியார் கிறிஸ்தவமதப் பாதிரிகளைப் பாதுகாத்ததின்பொருட்டு, நெல்ஸன் துரை, அவரைப் புகழ்கின்றார். 1682-ல் சின்னத்தம்பி முதலியாரின் ஆதிபத்தியம் முடிந்தது. முத்து அழகிரியின் பின்வந்த சொக்கப்பரின் ஆளுகையும் முடிந்தது (1659-1682). அவர் மகன் அரங்க கிருஷ்ணப்ப நாயகர் 1682 முதல் 1689 வரை ஆண்டார்.

---

## எட்டாம் அத்தியாயம்

### மாவை குமாரசுவாமி முதலியார்

1688 முதல் 1700 வரை அரங்க கிருஷ்ணப்பரும் (1682-1689), அவர் தாயார் மங்கம்மாளும் (1689-1706), திருச்சிராப்பள்ளியில் ஆளுங்காலை, திருநெல்வேலி ஆதிபத்தியத்தை மாவை குமாரசுவாமி முதலியார் வகித்துவந்தார். வேளாளர் சரிதையை விவரிக்கும் **வருணசிந்தாமணி** என்ற தமிழ் நூலில், இவ்விஷயம் கூறப்படுகின்றது.

(* 1842-ல் பெப்ரவரி 15-ம் தேதி, தளவாய் தீத்தாரப்ப (III)முதலியார் மதராஸ் ஸதர் அதலட்கோர்ட்டிற்கு எழுதிய கடித மொன்றில், மாவை குமாரசுவாமி முதலியார், அவருக்கு ஐந்து தலைமுறை முன்னோராகக் கூறப்படுகின்றார்.)

குமாரசுவாமி முதலியார் இராணுவ, நியாய அதிகாரங்களைச் செலுத்துங்கால், வட காசியிலிருந்து தென் குமரிக்கு யாத்திரை புரிவோரின் சௌகரியத்தை நோக்கி, 96 கல் சத்திரங்கள் கட்டினார்.

---

## ஒன்பதாம் அத்தியாயம்

### ஆறை அழகப்ப முதலியார்

ஆறை அழகப்ப முதலியார், மாவை குமாரசுவாமி முதலியாரின் மருமகன். அவருக்குப் பின் திருநெல்வேலியில் உத்தியோகம் செய்தார். அவர் உத்தியோக காலம் (1700-1735), இராணி மங்கம்மாள் ஆட்சியின் பிற்பாகத்திலும், விஜயரங்க சொக்கப்ப நாயகரும்(1706-1732)அவர்மனைவி இராணி மீனாக்ஷியும் (1732-1736) ஆண்ட காலத்திலுமாம். அவர் ஆற்றாரில் ஒரு பெரிய குடும்பத்தில் பிறந்தவர். ஆறை என்பது ஆற்றாரின் குறுக்கமே. அவர் தந்தையின் பெயர் மயிலப்ப முதலியார். அழகப்பருக்குக் குமாரசுவாமி, சிவசைலம் என்ற சகோதரர் இருவருண்டு.

"அம்பொன் மாளிகை யாறைவாழ் மயிலப்ப னருள் குமாரசுவாமி
தம்பியா முகில் புகழ்ச் சிவசயில நாதனுக்கு முன்னவ னானோன்
சம்பமாகரி காத்தரு ளழகப்பன் கனிந்தவன் பொடுங் கேட்ப
வும்பர் நாயகர் சந்நிதானத்தி லுரைத்த திக் கதை யாமால்."‡

---

* இக்கடிதத்தை, முத்திரைகளுடன், இன்றும் திருநெல்வேலி தளவாய் அரமனையில் காணலாம்.

‡ பாபநாசத் தலபுராணம்.

**வருண சிந்தாமணி**யின் ஆசிரியர் கூறும் வண்ணம், 'திருநெல்வேலி, மதுரை (இராமநாதபுரமும்கூடியது) ஜில்லாக்களின் பாளையக்காரர் யாவரும் இவருக்கு அடங்கி நடந்தனர். திருச்சிராப்பள்ளியில், கடைசியாய் ஆண்ட நாயகரின் விதவையாகிய இராணி மீனாக்ஷிக்கும், அவளை எதிர்த்த பங்காரு திருமலை நாயகருக்கும், உண்டாகிய கலகத்தில், மதுரை ராஜ்யம் பிளவு பட்ட போதிலும், தளவாய் அழகப்ப முதலியார், பாளையக்காரர்களிடமிருந்து தப்பாமல் கப்பம் வாங்கிவந்தார். தவிரவும், அவர்கள் சுதந்திரம் பெற முயலுவதைத் தடுத்தார். அவரைக் காண விரும்பிய ஒவ்வொரு பாளையக்காரனும், அவர் உத்திரவுபெற்ற பின், மெய்க்காவலாளரில் ஒருவனால், அவர் சன்னிதிக்கு அழைத்துச் செல்லப்படுவான். அங்கடைந்த பின், அவர் முன்புள்ள சேறுன நிலத்தில், சாஷ்டாங்க நமஸ்காரம் புரியவேண்டும். இவ்வித மரியாதை முடிந்தபின், அவனைப் பக்கத்தறைக்கு அழைத்துச்சென்று, வெந்நீரில் குளிப்பாட்டுவித்து, புதிய ஆடை உடுத்துவார்கள். பிறகு தான், அவன் முதலியாருடன் பேசலாம். பாளையக்காரர்களுக்குள், சிவகிரிப் பாளையக்காரன் முதலியாருக்கு அத்தியந்த நேசனானதினால், அவன் மட்டும் இப்படி மரியாதை செய்வதில்லை; அவன் மட்டும் நினைத்தபோது யதேச்சையாய் அவரிடம் செல்லலாம்.

அக்காலத்தில், திருவாங்கூர் இராஜ்யம் மதுரை நாயகரின் கீழ் ஒரு பாளையப் பட்டுப்போல விருந்தது. ஒருகால், திருவாங்கூர் அரசுரிமையைப்பற்றி வழக்குவந்தபோது, ஆறை அழகப்ப முதலியார் மத்தியஸ்தம் பண்ணும்படி நேரிட்டது. இச் சம்பவத்தில், முதலியாரின் சாமர்த்தியம் நன்கு துலங்கிற்று. திருவாங்கூர் ராஜ்ய சரித்திரத்திலே, இச்சம்பவம் பின் வருமாறு விவரிக்கப்பட்டிருக்கிறது :—

"திருச்சிராப்பள்ளிப்படைகள் திரும்பிப்போகவே, கப்பம் கட்டிவந்த தலைவர்கள், மறுபடியும் எதிர்த்தெழுந்தனர். தம் சுதந்திரத்தை நிலைநாட்ட இதுவே தக்க தருணமெனவெண்ணி, அவர்கள் ஒன்றுய்க் கூடினர் ; இறந்த மஹாராஜாவின் புத்திரராகிய குஞ்சுத்தம்பி (அல்லது இராமன்தம்பி) என்பவரும், பப்புத்தம்பி என்பவரும், இவர்களுடன் சேர்ந்தார்கள். இந்தத் தம்பிமார்கள், தங்கள் தந்தையார் அரசாண்ட காலத்தில் செல்வாக்குடன் வாழ்ந்தவர்கள். ஆனால் இப்பொழுதோ, மற்றப் பிரபுக்களுக்குச் சமானராய்விட்டார்கள். இவ் வவமானத்தை அவர்களால் சகிக்க முடியவில்லை. மற்றத்தலைவர்கள், அரசரின் ஆதிக்கத்தைமுறிக்க இவர்களே தக்க கருவிகள் என்பதைக் கண்டு, இவர்களுக்கு அனுதாபம் காட்டி, சிம்மாசனத்தைக் கவர முயலும்படி தூண்டினார்கள். 1730-ல் பப்புத்தம்பி, திருச்சிராப்பள்ளி சென்று,மார்த்தாண்டவர்மன், தன் ராஜ்யத்தை அக்கிரமமாய்ப் பிடுங்கிக்கொண்டதாக, நாயகரிடம் பொய்கூறி முறையிட்டார். இராஜ்யத்தைத் தனதாக்கும்படி உடன்படிக்கையும் செய்துகொண்டார். கப்பம் கட்டாததினாலும், தனது படைகளைத் திருப்பியனுப்பிவிட்டதாலும், மார்த்தாண்டவர்மன் மீது கோபம் கொண்ட நாயகர், பப்புத்தம்பியின் பாசாங்குகளை நம்பிவிட்டார். பிறகு, தன்காரியஸ்தருள் ஒருவராகிய அழகப்பமுதலியாரை, போதுமான காலாள் குதிரைப் படைகளுடன் திருவாங்கூர் சென்று, பப்புத்தம்பியின் பாத்தியதையை விசாரித் தறிந்துகொண்டு, அவர் கூறுவது மெய்யாயின், அவரையே அரசராக முடிசூட்டி வைக்கும்படி கட்டளையிட்டார். முதலியார், பப்புத்தம்பியுடன் உதயகிரி என்ற ஊர்சென்று, அங்கே தன் விசாரணையைத் தொடங்கினர். இதைக்கேட்ட மஹாராஜா, இராஜாங்கக் காரியதரிசியாகிய இராமையரை

யும், அவருக்கு உதவியாக நாராயணையரையும், பப்புத்தம்பி யின் பொய்களையும் பாசாங்குகளையும் நன்கு துலக்குவதற்கு வேண்டிய பத்திரங்களுடன், முதலியாரிடம் அனுப்பினர். பப்புத்தம்பியால் தன்பாத்தியதையை நிரூபிக்க ஆதாரமொன் றும் காட்டமுடியவில்லை. சிம்மாசனத்திற்கு மஹாராஜாவின் பாத்தியதையை இராமையர் சந்தேகத்திற் கிடமில்லாமல் நிரூபித்துவிட்டார். முதலியார், பப்புத்தம்பியின் மீது கடும் கோபம் கொண்டு, அவர் புகாரைத் தள்ளிவிட்டது மன்றி, நாட்டுவழக்கப்படி அரசருக்குக் கீழ்ப்படிந்து விசுவாசமாய் நடக்கவேண்டு மென்று, அவருக்குக் கட்டளையிட்டார். தன் கீழுள்ள தலைவர்கள் எதிர்த்தெழ எண்ணம் கொண்டிருந்த தால், முதலியாரின் சேனையிற் பாதியைத் தனக்குச் சிலகா லம் உதவிசெய்யும்படி விட்டுப்போக, மஹாராஜா முதலி யாரை வேண்டினர். முதலியார் அவ்வாறே செய்தபின், பல பரிசுகளுடன் திருச்சிராப்பள்ளி திரும்பினர்."

திருக்குற்றுலக் குறவஞ்சி, பாவநாசத் தலபுராணம், இவற்றின் நூலாசிரியர்கள், ஆறை அழகப்ப முதலியாரின் பக்தியையும் தானதருமங்களையும் புகழ்ந்து கொண்டாடு கின்றனர். மாவை குமாரசுவாமி முதலியார் கட்டிய கல்சத்தி ரங்கள், இவர்காலத்தில், தருமபுரம் ஆதீனத்தின் மேற்பார் வைக் குள்ளாக்கப்பட்டன. அழகப்ப முதலியார் இறந் ததைக் கூறு முன்னர், தன் வாரிசை எவ்வாறு அவர் நியமித் தார் என்பதை நோக்குவோம். இச் சம்பவம் மிக ருசி கர மானது. தனது வேலைத்திறனுக்கும் புத்திக் கூர்மைக் கும் பெயர்பெற்ற பிரங்கிப்படைக் குமாஸ்தா ஒருவன் இருந்தான். அவன் பெயர் குமாரசுவாமி. ஒருநாள், தனக்குச் சந்ததி யில்லாததை நினைந்து வருந்திய அழகப்ப முதலியார், தன் உற்றார் உறவினர் கூடிய சபையிலே, "உங்களுக்குள்

எவனப்பா எனக்கு நற்பெயர் கொண்டுவருவான்?" என்று கேட்டார். இச் சிறுவன் தைரியமாய் எழுந்து, "நான்தான்" என்றான். அவன் குறிப்பை யறிந்த அழகப்பமுதலியார், அவனை ஞாபகத்தில் வைத்திருந்து, பிறகு, அவன் குணாதிசயங்களைக் கவனித்து அகமகிழ்ந்தார். தன் சகோதரி புத்திரியை அவர் சுவீகார புத்திரியாய் வளர்த்து வந்தார். அப்பெண்ணுக்குக் கலியாணவய தாகியவுடன், குமாரசுவாமிக்கு அவளை மணம் புரியத் தனக்குள் நிச்சயித்தார். ஆனால், இதை வெளியிடாமல், கலியாணத்திற்கு வேண்டிய சகலமும் தயாரிக்கலானார். மணமகன் பெயர்குறியாத அழைப்புக்கடிதங்கள் உறவினருக்கு வழங்கப்பட்டன. கேட்டவர்க் கெல்லாம் மணப் பந்தலில் தெரியவரு மென்று சொல்லிவிட்டார். மணமகனுக்கே முகூர்த்த நாழிகைவரையில் ஒன்றும் தெரியாது. குறித்த சுபதினத் தன்று, குமாரசுவாமியைப் பார்த்து, "நீதான் மாப்பிள்ளை" என்று திடீரெனக் கூறி, அவனை விவாகத்துக்குச் சித்தமாகச் சொன்னார். அப்பொழுதுதான் அங்கு கூடிய உறவினரின் சந்தேகம் நிவர்த்தி யாயிற்று; குமாரசுவாமி முதலியாருக்கு எதிர்பாராத பாக்கியம் கிடைத்தது.

ஆறை அழகப்ப முதலியார் எவ்வாறு அநியாயமாய்க் கொலையுண்டன ரென்றும், குமாரசுவாமி முதலியார் எவ்வாறு பழிவாங்கின ரென்றும் இனிக் கூறிமுடிப்போம். அழகப்ப முதலியாருக்குப் புரியவேண்டியதான மரியாதையைப் பாளையக்காரர் வெறுத்தன ரென்றும், அவரை எதிர்த்தெழ உத்தேசித்தன ரென்றும் முன்னரே கூறினோம். அவர்களுள் அநேகர், அவரைக் கொல்லச் சதியாலோசனை செய்தனர். முதலியார் முழு நம்பிக்கை கொண்டிருந்த அவருடைய அத்தியந்த நேசனே துரோகியாய் விட்டான். அவன், அவர் தூங்கின சமயம் பார்த்து, அவர் பள்ளியறையுட் சென்று, அவ

ரைக் கொன்ற பின், அவர் குடலை மாலைபோல் அணிந்து கொண்டு, மற்றப் பாளையக்காரரிடம் போய்ச்சேர்ந்தான்.

இச்செய்தியைக் கேட்டுத் துக்கத்தில் மூழ்கிய குமார சுவாமி முதலியார், பழிக்குப்பழி வாங்குவதென்று சபதம் செய்துகொண்டார். தன் மாமனின் ஈமக்கடன்களை முடித்தபின், அவர், (மதுரை நாயகர்களின் ஆளுகை அக்காலத்தில் முடிந்துவிட்டதினால்,) நாட்டை ஆளும் ஆற்காடு நவாபிடம் சென்று, தன்னை அழகப்பருக்குப் பதிலாக நியமிக்கும்படி வேண்டினார். ஆனால் நியமனம் செய்வதற்குமுன் நவாபிற்குக் கொடுக்க வேண்டிய வழக்கமான காணிக்கையையும் அவரால் செலுத்த முடியவில்லை. நவாபு, தன்னிடமிருந்த முரட்டுக் குதிரை யொன்றைக் காட்டி, 'உம்மால் அதை யேறி ஓட்ட முடியுமா?' என்று, குமாரசுவாமி முதலியாரைக் கேட்டார். உடனே முதலியார், அதன் முதுகின் மேல் குதித்தேறி, வெகுதூரம் ஓட்டிச்சென்று, திரும்பிவந்து நவாபின் முன் இறங்கினார். அக்கணமே குதிரையும்கீழேவிழுந்து இறந்தது. அவர் தைரியத்தைக்கண்டு மெச்சிய நவாபு, அவர் வேண்டுகோளுக் கிணங்கி, திருநெல்வேலிக்கு அவரைத் தளவாயாக்கி அனுப்பி விட்டார். போகும்வழியில், முதலியார், சிவகிரி சென்று, கொலைகாரப் பாளையக்காரனாகிய வன்னியனைத் தன்முன் வரும்படி உத்திரவிட்டார். அவன், ஒளித்துக்கொண்டு, தன்னைப்போல் சாயலுள்ள வேறொருவனை முதலியாரிடம் அனுப்பினான். ஆனால் அவரை ஏமாற்றமுடியவில்லை. வந்தவனது வலது கன்னத்தில் ஒருமறு வில்லாததால், இவன் வன்னியனல்ல னென்று முதலியார் கண்டுகொண்டார். பிறகு வன்னியன் இருப்பிடத்தைக் கூறும்படி வந்தவனைச் சித்திரவதைசெய்தார். வன்னியன், ஒரு பிள்ளையார்கோயிலில் விக்கிரகத்தின் பின் ஒளித்திருப்பதாக, அவன் சொன்னான்.

உடனே முதலியார் வன்னியனைக் கண்டுபிடித்து, தன்னுடன் போர்புரியும்படி அவனை வலிய வழைத்தார். தன்பக்கத்தில் சண்டை செய்ய, அவர், கடையம் ஊரையடுத்து வாழ்ந்துவந்த நான்கு வீரரை நாடார் குலத்தினின்றும் பொறுக்கியெடுத்தார். இவ்வீரர்களின் பெயர்கள், புகழ் மாடக்கண்ணுச் சேர்வைகாரன், அவன்சகோதரன் பேய்மாடன் அல்லது தாலிக்குவேலிச் சேர்வைகாரன், புறங்காத்தபுலிச் சேர்வைகாரன், சூக்ஷமமுடையான் சேர்வைகாரன் என்பர். இவ்வாறு நேர்ந்த சண்டையில், தளவாய் குமாரசுவாமி முதலியார், கொலைபாதகனை வன்னியனின் தலையைவெட்டியபின், அவன்கோட்டையையும் நிலத்தோடு சமமாகும்படி தட்டி நிரத்திவிட்டார். தனக்குத் துணைநின்ற வீரர்கள் நால்வருக்கும், நிலங்களும் பதவிகளும், அளித்தார். குமாரசுவாமி முதலியாரின் மனைவி, நால்வருள் ஒருவனாகிய தாலிக்குவேலிச் சேர்வைகாரனுக்கு நன்றிபாராட்டியது, பின்வரும் கவியினால் விளங்கும்.

"நிலைகொண்ட கீர்த்தி அழகப்ப ராயன் தன் நித்திரையில்
கொலைகொண்ட பாதகன் தென்மலை வன்னியின் கோட்டை
தன்னில்,
அலைவந்து மோதி யிராவணன் கோட்டை அழிந்ததுபோல்
தலைகொண்டு வந்தான் என் தாலிக்கு வேலி தளசிங்கமே."

---

## பத்தாம் அத்தியாயம்
### தளவாய் குமாரசுவாமிமுதலியார்—1735-1757

**விஜயரங்க சோக்கநாத நாயகர் இறந்தபின்பு, அவர்பட்ட** மகிஷி மீனாக்ஷி ராணியார், பங்காரு திருமலை நாயகரின் மகன் விஜயகுமாரன்என்னும் சிறுவனைஸ்வீகாரஞ்செய்துகொண்டு

அவன் ஸ்தானத்தில் தானிருந்து, தன் சகோதரனுன வேங் கடப்பெருமாள் நாயகரின் உதவியால் ஆளத்தொடங்கினுள். பங்காரு திருமலை நாயகர் இதற்கிணங்காமல், தன் மகனுக்கா கத் தானே ஆளவேண்டு மென்று கலகஞ்செய்ய, இருவரும் ஆற்காட்டு நவாபின் மத்தியஸ்தத்தை நாடினுர்கள். இந்த வழக்கு, 1736-ம் வருஷத்தில், இருவரும் எதிர்பாராதவாறு முடிவுபெற்றது: எப்படியெனில், இருவருக்குமே நாடில்லா மல் சண்டாசாயபு நாட்டைத் தனக்கே பிடுங்கிக்கொண்டார். மீனுக்ஷி ராணியார் விஷத்தையுண்டு தற்கொலை செய்து கொண்டாள்; பங்காரு நாயகரும் அவர் மகனும், அரசாளும் ஆசையை ஒழித்து, சிவகங்கைச் சீமையிலுள்ள ஓர் ஊரில், ஒதுங்கி வாழலாயினர். இதனுல்தான், குமாரசுவாமி முதலி யார், தளவாய் உத்தியோகத்தை மதுரை நாயகரிடம் பெரு மல், அதற்குள் தென்னுடுகளுக்கெல்லாம் அதிபதியாகிவிட்ட ஆற்காட்டு நவாபால் நியமிக்கப்பட்டார்.

அதன் பின், ஆற்காட்டு நவாப் பட்டத்தின் உரிமைக் கும், நவாபுக்கு மேலான ஹைதராபாத் நிஜாம் பட்டத்துரி மைக்கும், வெவ்வேறு வாரிஸுகளும் வழக்குக்களும் யுத்தங் களும் ஏற்பட்டு, சென்னை ஈஸ்டிந்தியா கம்பெனியார் ஒரு கட்சிக்கும், புதுச்சேரி பிரெஞ்சுக்காரர் எதிர்க்கட்சிக்கும் உதவிபுரிய லாயினர். இந்தக் கலகங்களில் மைசூ ரரசரும் மஹாராஷ்டிரரும்கூடத் தலையிட நேர்ந்தது. இதனிடையே, இராமநாதபுரம் சிவகங்கைப் பாளையக்காரர் இருவரும் ஒன்று கூடி, வெள்ளிக்குறிச்சியில் ஒதுங்கியிருந்த விஜயகுமார திரு மலை நாயகரை இழுத்துவந்து, மதுரைச் சிம்மாசனத்தில் முடி சூட்டி வைத்து, திருநெல்வேலிச்சீமை தளவாய் குமாரசுவாமி முதலியாரின் மருமகனை அழகப்ப முதலியாரை அவருக் குத் தளவா யாக்கி, முண்டுமியா, நபிகான் என்னும் இருவரை

அவர்க் கீழ் பூஜ்தார்களாக நியமித்தனர். இந்த அழகப்ப முதலியாரைப் பற்றி, சரித்திர லிகிதங்கள் பின்வருமாறு கூறுகின்றன:—

"பிறகு அழகப்ப முதலியாரை அவர்கள் தளகர்த்தனாக்கி, அந்த உத்தியோக முத்திரையை அவரிடம் ஒப்புவித்து, தளவாய் முதலியார் என்ற பட்டத்தையும் அவருக்குக் கொடுத்தனர். அப்பால் அவரைத் திருநெல்வேலிச் சீமைக்கு அனுப்பினர். அந்நாள் முதல் இந்நாள் வரை, தளவாய் முதலியார் என்னும்பெயர், அரசரளித்த கௌரவப் பட்டமாக வழங்கிவருகின்றது. * * * அழகப்பமுதலி என்பவர் இராஜாவின் சேனுபதியாக நியமிக்கப்பட்டார்; **தளவாய்** என்ற பட்டத்துடன் திருநெல்வேலியில் உத்தியோகஞ் செய்துவந்தார். இன்றுவரை அவர் சந்ததியாருக்கு அந்தப் பட்டம் வழங்குகின்றது."

சில மாதங்களுக்குள் பூஜ்தார்களே கலகஞ்செய்து, விஜயகுமார திருமலை நாயகரை மீண்டும் வெள்ளிக்குறிச்சியில் ஒதுங்கி வாழும்படி துரத்திவிட்டனர்; நாயகர் வமிச அரசாட்சியும் முடிவுபெற்றது. இந்தக் கலகங்களெல்லாம் ஒருவாறு ஓய்வுற்று, 1754-ம் ஆண்டிலே, கர்நாடகதேசம் முழுதும் நவாப் முகம்மதலி கைவசமாகிவிட்டது. மதுரைப் பிரதேசத்தில் இந்தக் கலகங்கள் நிகழ்ந்த காலமெல்லாம், தளவாய் குமாரசுவாமி முதலியாரே நவாபுக்காகத் திருநெல்வேலிச் சீமையை ஆண்டு வந்தார். ஆர்ம் (Orme) என்பவரின் அறிக்கைப் பத்திரங்களில் 'முதலி' என்று அடிக்கடி வருவது, இவரைக் குறிப்பதே. **திருநெல்வேலிச்சரித்திரம்** என்னும் நூலில், பிஷப கால்ட்வெல் (Bishop Caldwell's *History of Tinnevelly*) பின் வருமாறு எழுதியிருக்கிறார் :—

"முதலி—இவர் தளவாய் முதலியார் குடும்பத்தில் ஒருவர். இந்த உத்தியோகத்தை, தொடர்ந்த பல வருஷங்களாக, இக் குடும்பத்தாரே நிர்வகித்து வந்தனர். தளவாய் என்பது இக் குடும்பத்துக் குரிய பரம்பரையான பட்டம்."

ஆறை அழகப்ப முதலியாரின் வாரிஸாக அவர் உத்தியோகத்தைப் பெற்ற குமாரசுவாமி முதலியார், திருநெல்வேலிச் சீமையை நவாபு முகம்மதலி தரப்பில் ஆண்டு வருகையில், எதிரிகளான சண்டாசாயபுவின் கட்சியார், அவர் தமயனரான தீத்தாரப்ப முதலியாரை அதே உத்தியோகத்துக்கு நியமித்தனர்.

1751 முதல் 1754 வரை சண்டாசாயபு தரப்பில் தீத்தாரப்ப முதலியார் உத்தியோகஞ் செய்துவந்தார்.

1754-க்குப் பின், நவாப் முகம்மதலி, விரோதிகள் எவருமின்றித் தனிபாட்சி செய்துவந்தா ராயினும், திருநெல்வேலி மதுரைச் சீமைகளி லுள்ள பாளையக்காரர் பலர், அவருக்கு அடங்காமல், கப்பம் கொடுக்க மறுத்துக் கலகஞ் செய்ததால், தொந்தரைகள் உண்டாயின. அப்பொழுது நவாப் சென்னையிலுள்ள கவர்னரின் உதவியை வேண்ட, அவர் 500 சோல்ஜர்களுடன் ஹெரன் என்னும் தளகர்த்தரையும், 2000 சிப்பாய்களுடன் கான்சாயபு கம்மந்தானையும், அனுப்பினர். நவாபின் தரப்பில் அவர் தமயனை மாபுஸ்கான் என்பவர் 1000 குதிரைப் படை வீரருடன் வந்தார். தெற்கு நோக்கி வந்த இம் மூன்று படைகளில், புதுக்கோட்டையாரின் உதவியை எதிர்பார்த்து, கான்சாயபு திருச்சிராப்பள்ளியில் தங்கிவிட, மற்றிருவரும், சண்டாசாயபுவின் கட்சிக்காரரை, வழியில் திருமாகூரில் முறியடித்துவிட்டு, மதுரையை அடைந்து, அதைக் கைப்பற்றிக் கொண்டனர். இராமநாதபுரம் சேதுபதி செலுத்தவேண்டிய கப்பத்துக்குப் பதிலாக, அவருக்குச் சொந்த

மான் இரண்டு தீவுகளைத் தம் வசமாக்கிய பிறகு, திருநெல்வேலிச் சீமையுட் புகுந்து, பாஞ்சாலங்குறிச்சி, எட்டையாபுரம் பாளையக்காரர்கள் கொடுக்கவேண்டிய கப்பத்தில் ஒரு பகுதியை அவர்களிடம் வசூல் செய்தனர். அப்பால், திருநெல்வேலிக்கு 40 மைல் தென்பாலுள்ள நத்தக்கோட்டைப்பாளையப்பட்டுக் கோட்டையை இடித்து அழித்தனர். ஆயின், ஆவுடையாள்புரம் பாளையக்காரரான புலித்தேவருக்குச் சொந்தமானநெய்க்கட்டஞ்செவலே அவர்களால் பிடிக்க முடியவில்லை. இதற்குள், மதுரை திருநெல்வேலி இரண்டு சீமைகளையும், தனக்கே 15 லக்ஷம் ரூபாய்க்குக் குத்தகைக்கு விடும்படி செய்யும் பொருட்டு, மாபுஸ்கான், ஹெறரன் தளகர்த்தருக்குக் கைக்கூலிகொடுத்தது தெரிந்து, ஹெறரன் சென்னைக்கு மீளநேர்ந்தது. இதனால் மாபுஸ்கானே சேனைபதியானார். ஆயினும், மதுரைவிட்டோடிய சண்டாசாயபுவின் காரியஸ்தர் மூவரும், திருவாங்கூர் ராஜா, புலித்தேவர்முதலிய பாளையக்காரர் சிலர்களின் உதவியைக் கொண்டு செய்த கலகத்தை அடக்கவோ, தன் சைநியச் சம்பளத்துக்கு வேண்டிய பணத்தை வசூல் செய்யவோ, மாபுஸ்கானல் முடியவில்லை. அதனால், எல்லாச் சேனைகளுக்கும் தலைவராக, கான்சாயபு கம்மந்தான் என்னும் யூஸப்கான், தெற்கு நோக்கிப் படைகளுடன் வந்தார். இதையறிந்த எதிர்க்கட்சி வீரர்களான முண்டுமியா, நபிகான், புலித்தேவர் முதலியோர், தம் தண்டுகளுடன், ஸ்ரீவில்லிப்புத்தூர்க் கோட்டைக்குள் காவல்கொண்டனர். நவாபின் சகோதரனை அப்டுல் ரகீமும், அப்டுல் மல்லி என்பவரும், அவர்களை வெளிக்கிளப்ப முயன்றது பலிக்கவில்லை. இதனிடையே, வேறு சில பாளையக்காரரும் எதிர்க்கட்சியைச் சேர்ந்தனர். பாஞ்சாலங்குறிச்சிப்பாளையக்காரரும், பாளையப்பட்டுத்தலைவர்களில் ஒருவருமான கட்டப்பொம்ம நாயக்கருக்குச் சிலகிராமங்களை

விட்டுக்கொடுத்து, அவர் உதவியைப்பெற்று, திருநெல்வேலிக் கருகே மாபுஸ்கான் செய்த சண்டையில், எதிரிகளின் தலைவனை முண்டுமியா மடிந்தொழிய, புலித்தேவர் புறங்காட்டி ஓடி விட்டார். இவ்வாறு மாபுஸ்கான் செய்தபோரும், ஒருவாறு நாட்டில் கலகத்தை யடக்க உதவிற்று. புதுக்கோட்டைத் துணைப்படைகளுடன், யூஸப்கான், 1756 மார்ச்சுமாதம் மதுரையை அடைந்து, அப்பால் கயத்தாற்றில் மாபுஸ்கானுடன் சேர்ந்துகொண்டார். பாளையக்காரரிடம் வசூலித்த பணத்தைக் கொண்டு தண்டுகளுக்குரிய சம்பளப் பாக்கியைக் கொடுக்க முடியவில்லை. அப்பால் கொல்லார்பட்டி, ஏழாயிரம் பண்ணை, கொல்லங்கொண்டான் பாளையக்காரர்கள் கொடுக்க வேண்டிய திறையைக் கண்டித்து வாங்கினார்கள். 1756 ஜுலையில், யூஸப்கான் ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று, அந்தப் பக்கமுள்ள பாளையப்பட்டுக்களை ஒழுங்குபடுத்தினார். அப்பால் நாட்டைப் பதினைந்து லக்ஷத்துக்குக் குத்தகை கொண்ட மாபுஸ்கானை, நவாபிடம் சென்று கணக்குக்களைத் தீர்த்துக் கொள்ளும்படி, ஆற்காட்டுக்குப் போக ஆஜ்ஞாபித்தார். ஆகஸ்டு மாதத்தில் தன் சைநியங்களில் ஈராயிரவரோடு திருநெல்வேலி சென்று, மாபுஸ்கான் தரப்பிலே அங்கிருந்து சென்னை கவர்னர் பிகட்பிரபுவாலும் நவாபாலும் நியமிக்கப்பட்ட சரியான குத்தகைதாரரான தளவாய் குமாரசுவாமி முதலியாரைத் தொந்திரவு செய்து கொண்டிருந்த மீர் ஜாப்பர் என்பவரை, மதுரைக்குச் செல்லும்படி அனுப்பிவிட்டார். இவ்வளவு கலகங்களும் குழப்பங்களுமா யிருந்த காலத்திலே, அதிகாரத்துக் கடங்காத பாளையக்காரர்க ளிடமிருந்து கப்பங்களை வசூல்செய்து, ஆண்டுக்கு 11 லக்ஷம் ரூபாய்வீதம் குத்தகைசெலுத்த ஒப்புக்கொண்டு, நவாபுக்குப்பேருதவிசெய்த குமாரசுவாமி முதலியாரின் ஆட்சித்திறமையும் ஸாமர்த்திய

மும் யோக்கியதையும் பாராட்டத்தக்கன. அவருக்கு இவ் வேலையில் உதவி செய்தற் கென்றே, ஆயிரம் போர்வீரர் கொண்ட பட்டாளம் ஒன்று, திருநெல்வேலியில் விடப்பட்டது. ஸிவில் கிரிமினல் இரண்டு தரப்பின் முழு அதிகாரத்தையும், அவர் பெற்றார். இவ்வாறு ஏற்பாடான பின்பு, ஜூலைமாத ஆரம்பத்தில், ஆங்காங்கு தன் காரியஸ்தர்களை நியமித்து, பயிர் நிலங்களில் கம்பெனியார் கொடிகளை நடும்படி ஆஜ்ஞாபித்து, நேரில் யாவற்றையும் தானே கண்காணித்துத் தளவாய் உத்தியோகம் செய்யத் தொடங்கினார்.

---

## பதினொன்றாம் அத்தியாயம்

### மேன்மேலும் நேர்ந்த தொந்தரைகள்

முன் அதிகாரத்தில் **மாபுஸ்கான்** மதுரை, **திருநெல்**வேலிப் பாளையங்களின் குத்தகையைத் தனக்கு வேண்டிக் கொண்டா ரென்றும், அவர் யூஸப் கானுல், நாவாபுடன் கணக்குத் தீர்க்க வடக்கே அனுப்பப்பட்டா ரென்றும் சொன்னோம். மாபுஸ்கான் ஸ்ரீவில்லிபுத்தூரி னின்றும் மதுரைக்கு வந்தவுடன், அவர் ஜமேதார்கள், தங்களுக்குப் பாக்கியா யிருந்த சம்பளத்தைக் கொடுக்கும்படி, அவரைத் தொந்திரவு செய்ய லானார்கள். அவர், அவ்வாறு செய்ய மாட்டாமையை அறிந்தவுடன், அவர்கள், தங்கள் எண்ணத்தை நிறைவேற்ற வேறு உபாயங்கள் தேடலானார்கள். மூன்று ஆங்கிலப் படைகளை அவர்கள் துரத்திவிட்டார்கள். நாயகரைத் தோற்கடித்து மதுரையின் ஆளுகையைத் தாங்களே கொண்ட மூவருள் ஒருவனாகிய மாயனா என்பவன், இப்பொழுது கள்ளர் ஜாதியைச் சேர்ந்த 2,000 வீரருடனும்,

எதிர்த்த ஜமேதார்களுக்கு வேண்டிய போஜனபதார்த்தங்களுடனும், திடீரெனத் தோன்றினான். இவ்விரோதிகள் யாவரும், மதுரையில் ஒன்று கூடி, நாவாபின் சன்னத்தை ஒரு தூதன் ஒரு யானையின்மேல் கொண்டு வருவது போல் போலிக்கு நடித்துக் காட்டிய பின்பு, மாபுஸ்கானை மதுராதிபதி யாக்கி விட்டனர். அதிருப்தி யுற்ற பாளையக்காரர்களையும் தங்களுக்கு உதவி புரியும்படி இவர்கள்வேண்டினர். தவிரவும், தளவாய் முதலியாரின் ஆஜ்ஞையின் மேல், வரி வசூல் புரியும் பொருட்டு வயல்களில் நட்டிருந்த கம்பெனி யாரின் கொடிகளை யெல்லாம், இவர்கள் மிகுந்த அவமரியாதையுடன் பிடுங்கி யெறிந்துவிட்டனர். திருநெல்வேலியிலிருந்த யூஸப்கானை இச்சமாசாரம் எட்டிய வுடன், அவர், மாபுஸ்கானால் காரியஸ்தனாக நியமிக்கப்பட்ட மீர் ஜாபர் என்பவனை, வழிமறித்துச் சிறைகொண்டார். பிறகு, யூஸப்கான், ஆகஸ்டுமாதத்தில் ஒரு பெரும்சேனையுடன் புறப்பட்டு, மதுரைக்கு மூன்று மைல் தெற்கி லுள்ள திருப்பரங்குன்றம் என்ற விடத்தில் வந்து தங்கினார். ஆனால் அவர், திருநெல்வேலியில், ஜமால் ஸாகிப் என்பவன் கீழ் ஆயிரம் சிப்பாய்கள்கொண்ட ஒரு பட்டாளத்தை நிறுத்திவிட்டு வந்திருந்தார். மதுரைக் கோட்டையைத் தகர்க்க யூஸப்கானுக்குப் பீரங்கிகள் வேண்டியிருந்ததாலும், எதிரிகளின் வலிமை அவருக்கு நன்றாய்த் தெரிந்திருந்ததாலும், அவர் உடனே சண்டையை ஆரம்பிக்க வில்லை. 1756-ம் வருஷம் செப்டம்பர்மீ 13-ம் தேதி, தளவாய் குமாரசுவாமி முதலியார், இரண்டு கும்பெனி சிபாய்களை யூஸப்கான் உதவிக்குக் கொண்டுவிட்டு, மறுநாள் திருநெல்வேலிக்குத் திரும்பி விட்டார். ஆனால், விரோதிகள் சகாயம் புரிவாரென்று எதிர்பார்த்த புலித்தேவர், கட்டப்பொம்மன் என்ற இரண்டு

பாளையக்காரர்களும், அவர்கள் பக்கம் சேரத் தாமதித்தார்கள். ஆகையால், ஜமேதார்கள் அதிகம் மீறிச் செல்ல அஞ்சி, தங்கள் சம்பளத்தைப் பெறும்பொருட்டு, 4 லக்ஷம் ரூபாய் தந்தால் தாங்கள் அடங்கிவிடுவதாக, மதராஸிலுள்ள ஆங்கில கவர்ன்மெண்டாருக்குச் சொன்னார்கள். அக் காலத்தில், ஆங்கிலேயருக்குச் சமாதானம் உசிதமெனத் தோற்றிற்று. ஆகையால், அவர்கள், திரிச்சிராப்பள்ளியிலிருந்த காப்டன் காலியாட் என்பவரை, ஜமேதார்களுடன் சமாளிக்கும்படி உத்திரவளித்தனர். காப்டன் காலியாட், தனது முனுஷியை மாபுஸ்கானிடம் அனுப்பினார். மாபுஸ்கான், மதுரையின் ஆதிபத்தியம் தளவாய் முதலியாரிடமிருந்து பிடுங்கித் தனக்குக் கொடுக்கப் பட்டாலொழிய, தான் எள்ளளவேனும் சம்மதிக்க முடியாதென்று கோபமாய்க் கூறினார். பிறகு முனுஷி ஜமேதார்களைச் சென்று பார்க்க, அவர்கள், கையில் 50,000 ரூபாயும், பிறகு $1\frac{1}{2}$ லக்ஷமும் தருவதாயுமிருந்தால், மதுரைக் கோட்டையை விட்டு வெளியேறுவதாகச் சொன்னார்கள். இவ்வுடன்படிக்கைக்கு யூஸப்கானின் அநுமதியையும் பெறும் பொருட்டு, முனுஷியும் ஜமேதார்களும் அவரை அணுகினர். யூஸப்கான், காலியாட் துரைக்கெழுத, அவர், கோட்டையை விட்டு வெளியேறும்பொழுது, ஜமேதார்கள், மாபுஸ்கானையும் அவர் காரியஸ்தனாகிய பார்க்கதுல்லாவையும் கம்பெனியாரிடம் ஒப்பித்துவிட்டால், தனக்குச் சம்மதமென்றார். ஜமேதார்கள் இந்த நிபந்தனைக்கு ஆக்ஷேபித்தனர். இப்பொழுது, உடன்படிக்கையின்படி ஜமேதார்களுக்குக் கொடுக்கப் பணம் வேண்டியிருந்ததால், யூஸப்கான், அதுவரை சேர்ந்திருந்த வரித் தொகையைத் தனக்கு அனுப்பும்படி, தளவாய் முதலியாரை வேண்டிக் கொண்டார். இக் கடிதங்கள் போய் வர ஒரு

மாதகாலம் சென்றது. அதற்குள் பல சம்பவங்கள் நிகழ்ந்து விட்டன.

திருப்பரங்குன்றம் சேனையை விட்டுத் திரும்பி வரும் பொழுது, தளவாய் முதலியார், புலித்தேவன், கட்டப்பொம் மன் முதலிய முக்கியமான பாளையக்காரர் சிலரை, தன்னை வந்து காணும்படி அழைத்தார். அவ்விருவரும் முதலியாரைச் சகல மரியாதைகளுடன் எதிர்சென்று கண்டு, திருநெல் வேலிக்கு அழைத்துச் சென்றனர். ஸெப்டம்பர் 27-ம் தேதி யன்று, அந்நகரில், முதலியார், வழக்கமான கொண்டாட்டங் களுடன் வரவேற்கப் பட்டார். பாளையக்காரரும், அவர்கள் பரிவாரங்களும், சிலநாள் அங்கே தங்கினர். பரிவாரங்களுள் சிலர், நகரில் கொள்ளையடிக்க, யூஸப்கானால் அங்கு நிறுத்திய பட்டாளத்தின் தலைவனான ஜமால் சாயபு, அவர்களைத் தண் டித்தான். தவிரவும், பாளையக்காரரின் படைகளுக்கு இவ் வளவு தயவு காட்டுவதற்காக, தளவாய் முதலியாரையும் கோபித்தான். முதலியாருக்கும் கும்பெனிச் சிபாய்களுக்கும் உண்டான இக் கலகமே தக்க சமயமெனக் கொண்டு, திருநெல்வேலியிலுள்ள முதலாளிகள் வழக்கம்போல் கடன் கொடுத்தலை மறுத்துவிட்டார்கள். ஆகையால் யூஸப் கானுக்கு 20,000 ரூ. தான் முதலியாரால் அனுப்ப முடிந் தது. ஜமேதார்கள் பக்கம் சேர்ந்து, மதுரைக்கும் திருநெல் வேலிக்கும் நடுவில் வழிபறித்துக் கொண்டும், காலியாட்டுடன் அவர்கள் செய்த உடன்படிக்கையைத் தன்னாலியன்றமட்டும் முறிக்க முயன்றுகொண்டுமிருந்த நபிகான் கட்டாக் என்பவன், யூஸப்கானுக்கு அனுப்பப்பட்ட இத்தொகையையும் வழி மறித்துப் பிடுங்கி விடுவானெனப் பயந்தார்கள். இப்பொழுது, மாபுஸ்கானும் பர்க்கதுல்லாவுமாகச் சேர்ந்து, ஷர்கான் என்பவன் மூலமாய், காலியாட்டுடன் அவர்கள் செய்த உடன்

படிக்கையை முறித்து விடுவதற்கு, ஜமேதார்களை இசையச் செய்தனர். இவ்வாறான போதிலும், காப்தன் காலியாட், புக்கான்ஜி என்பவருடனும், நவாபால் அனுப்பப்பட்ட மத்தியஸ்தர் ஒருவருடனும், மாபுஸ்கானை அணுகி, உடன்படிக்கையை ஒத்துக் கொள்ளும்படி தூண்டினார்.

ஒரு ஜில்லாவிற்குத் தன்னைத் தலைவராக்குவதானால், ஒப்புக்கொள்வதாக மாபுஸ்கான் கூறினார். மதராஸ் கவர்ன்மெண்டார் உத்திரவளித்தால் சம்மதிப்பதாகக் காலியாட் கூறினார். வடக்கே இவ்வாறு சமாதானம் நேரிடுவது போல் தோற்றிய பொழுது, தெற்கே சச்சர வுண்டாயிற்று. சேனைக்குக் கொடுக்க வேண்டிய சம்பளத்தொகையின் பாகத்தைப் பற்றி, யூஸப்கானும் தளவாய் முதலியாரும் அபிப்பிராய பேதம் கொண்டனர். தனக்குக் கீழுள்ள படைகளுக்கே தான் சம்பளம் கொடுக்கவேண்டுமென்பது முதலியாரின் வழக்கு. ஆனால், தன் படைகளுக்கும் அவரே கொடுக்க வேண்டுமென்று யூஸப்கான் கூறினார். யூஸப்பின் காரியஸ்தனாகிய ஜமால் சாயபுவும், யூஸப்கான் கூறிய வண்ணம் செய்யும்படி தளவாய் முதலியாரைத் தூண்டினான். தவிரவும், அவன், முதலியாருக்கு மரியாதை செலுத்த வந்திருந்த பாளையக்காரர் யாவரையும், திருநெல்வேலி நகரத்தை விட்டு வெளியேறும்படி செய்தான். இப் பாளையக்காரருள் புலித்தேவன் ஒருவன். அவன், தனக்குற்ற அவமானத்தை நினைத்துக் கடுஞ்சினங் கொண்டு, ஷர்கான் மூலமாய், எதிரிகளைச் சேர்வதாக இரகசியச் செய்தி யனுப்பினான். கட்டப் பொம்மனும் அவனைச் சேர்ந்து கொண்டான். தளவாய் முதலியார் ஆழ்வார்திருநகரி சென்ற சமயம் பார்த்து, இத்தலைவர்கள், பக்கத்துக் கிராமங்களைச் சூறையாடினர். முதலியார் பாளையங்கோட்டைக்கு வந்து, கலகத்தாரிடமிருந்து கோட்டையைப் பிடுங்கிக் கொண்டார்.

இச்செய்தி கேட்ட யூஸப்கான் திருநெல்வேலிக்குத் திரும்பினுர். கங்கைகொண்டானில் அவர் தளவாய் முதலியாரைச் சந்திக்க, இருவரும் சேர்ந்து எதிரிகளைத் தோற்கடித்தனர். இதற்குள் ஜமேதார்களுடனும் மாபுஸ்கானுடனும் சமாதானம் செய்யும்படி, காலியாட், ரம்போல்ட் துரையை மதுரைக் கனுப்பினுர். ஆனுல் ஷர்கானும் பார்க்கதுல்லாவும் இதைக் கலைக்க முயன்றனர். ஆயினும் ரம்போல்ட் துரை, யூஸப்கான் படைகள் விரைவில் வந்து சேருமென்றும், இங்கிலீஷ்காரர் இவ்வித அவமானத்தைப் பொறுக்கமாட்டார்களென்றும் பயமுறுத்தினுர். மாபுஸ்கானும் ஜமேதார்களும் பயந்துபோய், உடன்படிக்கையை ஒத்துக்கொண்டு, மதராஸ் கவர்ன்மெண்டாரின் உத்திரவை எதிர்பார்க்கச் சம்மதித்தார்கள். ஆனுல் மூன்று நாள் சென்றபின், நபிகான் மதுரைக்கு வந்து, சமாதானத்தை மறுபடியும் கலைத்து விட்டான். பிரதேச மவ்வளவையும் மறுபடியும் மாபுஸ்கானுக்கு வென்று கொடுப்பதாக அவன் கூறினதுமன்றி, பாளையக்காரர்களுக்கும், மைசூர் தளகர்த்தனுகிய ஹைதர் அலிக்கும் திருவாங்கூர் அரசனுக்கும்கூடக் கடிதங்கள் அனுப்பினுன். பிறகு அவனும் மாபுஸ்கானும் புலித்தேவன் சகாயத்தைத் தேடினர்.

எதிரிகள் இவ்வாறு போருக்குச் சித்தம் செய்ய, முதலியாரும் யூஸப்கானும் ரம்போல்ட் துரையைச் சேர்வதற்காக மதுரைநோக்கிப் புறப்பட்டனர். வழியில் அவர்கள் எதிரிகளைச் சேராவண்ணம் பாளையக்காரர்களைப் பயமுறுத்தும் பொருட்டு, ஸ்ரீவில்லிபுத்தூரிலும் கங்கைகொண்டானிலும் தங்கினுர்கள். தளவாய் முதலியார் அதிசாமர்த்தியமாய், தனது மருமகன் அழகப்ப முதலியாரைப் புலித்தேவனிடம், அனுப்பித்து, அவன் உதவிபுரிந்தால் சில நிலங்களை வெகு

மான்மாய்த் தருவதாகச் சொல்லியனுப்பினர். புலித்தேவன் தனது காரியஸ்தனையும் இருநூறு ஆட்களையும் முதலியாருக்கு மரியாதை செய்ய அனுப்பினன். இவர்களுள் ஐவர், யூஸப்கானின் மாடு குதிரைகளைக் கொள்ளையடித்தனர். அச் சேனுதிபதி, கடுஞ் சினம் கொண்டு, அவர்களைச் சுட்டுக் கொன்றார். இச்சம்பவத்தால், புலித்தேவன் எதிரிபக்கம் சேரும்படி நேரிட்டது. இனிமேல் அவர்களின் பொருட்டே அவன் உழைத்தான். அவன், நெக்கட்டஞ் செவலில் மாபுஸ் கானைத் தான் வைத்துப் பாதுகாப்பதாக, ஜமேதார்களுக்குச் செய்தியனுப்பினன்.

புலித்தேவனும் கட்டப்பொம்மனும் எங்கும் சென்று சூறையாட ஆரம்பித்தனர். கும்பெனியார் பட்டாளங்களால் திருநெல்வேலி நகரம் பாதுகாக்கப்பட்டது. ஆனல் எட்டையாபுரப்பாளையம் இச்சூறையால் சேதமுற்றது. ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்த யூஸப்கான் இக்கள்ளரைத்தடுக்க முயன்றும், இயலவில்லை. பிரெஞ்சுக்காரர் எதிரிகளுக்கு உதவி செய்வார்களென்ற அபாயம் மிகுந்திருந்ததால், மதராஸ் கவர்ன்மென்டார், காப்டன் காலியாட்டைப் படைகளுடன் எதிரிகளை அடக்க அனுப்பியிருந்தனர். யூஸப்கான் அவர் வரவை எதிர் பார்த்துக் கொண்டிருந்தார். ஆனல், தஞ்சாவூர் அரசர் படைகளுடன், அதுவரை ஐரோப்பியர் கால்வைத்திராத பிரதேசத்திற்குக் காப்டன் காலியாட் வருமுன்னர், யூஸப்கானைத் திருநெல்வேலிக்குப் போய்க் காத்திருக்கும்படி ஒரு கட்டளை வந்தது. அவர் திருநெல்வேலி வந்தவுடன், அந் நகரத்திற்கு இருபது மைல் வடக்கி லுள்ள ஆழ்வார்குறிச்சி யென்ற விடத்திற்கு, எதிரிகள் பின் வாங்கினர். இங்கு, சில நாட்களுக்கு முன்னர், தளவாய் முதலியார், ஒரு பெரும் போர்புரிந்து, ஒரு மட்கோட்டையின் சுவரை யிடித்து,

தன் மருமகன் அழகப்பரையும் ஒரு பட்டாளத்தையும் நிறுத்திவிட்டுப் போயிருந்தார். இப்பொழுது, எதிரிகள் அங்கே சென்றவுடன், அழகப்பர் அவர்களை எதிர்த்தார். ஆனால் அவர்கள் சேனுபலம் எவ்வளவோ அதிகமாயிருந்த தால், அவர் சிறைப் பிடிக்கப்பட்டு நெக்கட்டஞ் செவலுக் கனுப்பப்பட்டார்; ஆயினும் சீக்கிரத்தில் விடுதலையடைந்தார். எவ்வாறெனில், இச் செய்தி தளவாய் முதலியாரைக் கிட்டிய வுடன், அவரும் யூஸப்கானும் ஒரு பெரும் சேனையுடன் வந்து, எதிரிகளுடன் கடும்போர் புரிந்தனர். இருபக்கமும் சிறு சண்டைகளுடன் தொடங்கி, சாயங்காலமாகுமுன் எதிரிகள் கோட்டையையும் கிராமத்தையும் விட்டோடும்படி நேரிட்டது; ஊற்றுமலைப் பாளையக்காரனின் கால்கள் இரண் டும் பீரங்கிக்குண்டால் முறிபட்டன; புலித்தேவனுடைய சேனுபதி யிறந்தான். இவ்விதமாகத் தளவாய் முதலியாருக்கு ஒரு பெரிய வெற்றிகிடைத்தது. இச்சம்பவம் 1757-ம் வரு ஷம் மார்ச்சு மீ 4-ம் தேதியில் நிகழ்ந்தது. மார்ச்சு 17-ல் காப்டன் காலியாட் திருச்சிராப்பள்ளி வந்துசேர்ந்தார். காலி யாட்டின் படைகள், யூஸப்கானின் படைகளுடன் சேர்ந்தன வாயினும், போதுமான சேனுபலம் உண்டாக்குதல் கஷ்ட மாயிற்று. ஏனெனில் யூஸப்கான், ஷராப்புக்கள் பண முதவு தலைக் கெடுத்தார். ஆனால், காலியாட்டின் மூலமாகக் கடைசியில் சமாதானம் உண்டாகி, சிப்பாய்களின் சம்பளத் தின் பொருட்டு ஷராப்புக்கள் இரண்டு லக்ஷம் ரூபாய் உதவி ஞர்கள்.

இதற்குள், கட்டப்பொம்மன் குடும்பத்தில் ஓர் பெரிய கலியாணம் நேரிட, முதலியார் அதற்குச் சென்றதால், அவன் முதலியார் பக்கம் சேர்ந்துகொண்டான். நவாபின் துருப்புக்களால் தனக்குக் கீழுள்ள எட்டையாபுரம் பாளையக்

காரனுக்குச் சேதமுண்டாயிற் றென்றும், அதற்கேதாவது கைம்மாறு செய்யவேண்டு மென்றும் அவன் முதலியாரைக் கேட்டுக்கொண்டான். முதலியாரின் ஆலோசனையின்படி, காலியாட் துரை, நவாபின் நண்பரான தொண்டமான் எட்டையாபுரத்தி னின்றும் பிடித்துச் சென்ற பிணையாளிகளை மீட்கவென்று, பணம் கொடுத்தார். இதற்குள், வெள்ளச் சேதத்தினால் நாட்டில் பஞ்சமுண்டாயிற்று. ஷராப்புக்களிடமிருந்து வாங்கிய பணத்தைக்கொண்டு விவசாயிகள் சகாயம் புரியப்பட்டனர். இதற்குள், புலித்தேவனும் மாபுஸ்கானும், சோழவந்தான் ஜில்லாவையும் 5 லக்ஷம் ரூபாயையும் கொடுப்பதாகக் கூறி, மைசூர்க்காரர்களின் உதவியைச் சம்பாதித்துவிட்டாரென்றும், பிரெஞ்சுக்காரர்கள் அவர்களுக்குச் சகாயம்செய்ய ஆயத்தமாய் இருக்கின்றன ரென்றும், செய்தி எட்டியது. ஆகையால் காப்டன் காலியாட்டும் முதலியாரும் யூஸப்கானும் ஒரு பெரும்படையுடன் மதுரை நோக்கிப் புறப்பட்டனர். யூஸப்கான் பீரங்கிப்படையையும், முதலியார் குதிரைப்படையையும், மேற்பார்த்துவந்தனர். அந்ததினத்திலேயே பார்க்கதுல்லாவும் நாபிகான்கட்டாக்கும் 500 குதிரைப்படையுடன், மாபுஸ்கானையும் புலித்தேவனையும் நெக்கட்டம்செவலில் விட்டுவிட்டு, மதுரைக்குப் புறப்பட்டனர். ஆனால், போகும்வழியில், யூஸப்கானின் நண்பனான சிவகிரிப் பாளையக்காரன், அவர்கள் குதிரைப்படைகளை முறியடித்து விட்டான்.

ஏப்பிரல் 20-ம் தேதியில் ஆங்கிலப்படைகள் திருப்பரங்குன்றத்தில் தங்கின. யூஸப்கான், எதிரிகளிட மிருந்து சோழவந்தானைப் பிடுங்கச் சென்றார். ஆனால் அவர் அணுகியவுடன், எதிரிகள் அவ்விடத்தைவிட்டு வெளியேறிப்போயினர். 26-ம் தேதி யன்றுதான் யூஸப்கானால் மதுரைக்குத் திரும்ப

முடிந்தது. மே மீ கடைசி நாளன்று, காப்டன் காலியாட், நள்ளிரவில் ஏணிகளைக்கொண்டு மதுரைக்கோட்டைக்குள் புகுவதற்கோர் உபாயம் செய்தார். ஆனால் ஒரு நாய் குலைத்ததனால், கோட்டையுள்ளிருந்த வீரர் விழித்துக்கொண்டனர். தமது எதிரிகளின் வலிமையை நோக்கி, ஜமேதார்கள் சமாதானம் புரியச் சம்மதித்தனர்.

இப்பொழுது, பிரெஞ்சுக்காரர் திருச்சிராப்பள்ளிக் கோட்டையை முற்றுகை செய்தனர். அக்கோட்டை காப்டன் ஸ்மித் என்பவரால் வீரத்துடன் பாதுகாக்கப்பட்டது. கும்பெனியாரின் படைகள் மேற்கில் யுத்தம் புரிந்து கொண்டிருந்ததால், காப்டன்காலியாட், படைகளுடன் திருச்சிராப்பள்ளி செல்லும்படி உத்திரவளிக்கப்பட்டார். உத்திரவின்படி, அவர், ரம்போல்ட்துரையைச் சில படைகளுடன் மதுரையில் வைத்துவிட்டு, யூஸப்கானையும் ரம்போல்டையும் ஜமேதார்களுடன் சமாதானம் புரிய முடியுமானால் புரியும்படி கூறியபின், திருச்சிராப்பள்ளி சென்றார். இறுமாப்பு மிகுந்த யூஸப்கானும் முதலியாரும் ஒருவரையொருவர் வெறுத்ததால், தளவாய்முதலியார், காலியாட்டுடன், திருச்சிராப்பள்ளியில் அடைபட்ட ஆங்கில வீரருக்குச் சகாயம் புரியச் சென்றார். தென்னிந்தியாவில் ஆங்கில ஆதிபத்யத்தை நிலை நிறுத்தும் முயற்சியில், இவ்விருவர்க்கும் நேர்ந்த அபாயங்களையும் கஷ்டங்களையும் நிதரிசனமாய்ப் பார்த்த ஆர்ம்துரை, பின்வருமாறு விவரிக்கின்றார்:—

"படைகள், கூடாரமில்லாமலும், பயணச்சாமான்களில்லாமலும், பீரங்கிப்படையில்லாமலும் நடந்துசென்றன. மிகுதியாயிருந்த குண்டுகளை, சில காளைமாடுகள் தூக்கிச்சென்றன. சேனை தங்கும் வெவ்வேறிடங்களில் உணவு தயாரிப்பதற்காக வேலைக்காரர்கள் முன்னரே அனுப்பப்பட்டனர். 25-ம்

"தேதி காலையில், திருச்சிராப்பள்ளியிலிருந்து பத்தொன்பது மைல் தூரத்தி லுள்ள எலியாபுரம் கிராமத்தில் சேனை தங்கிற்று. டி ஆடியூல் என்றபிரெஞ்சுத்தலைவர், காலியாட்டின் வரவை அறிந்து, தான் அதுவரையில் தங்கியிருந்த உறையூர் கோயில் என்ற இடத்தை விட்டுவிட்டு, தன் படைகளை 'பாகியூர் தோப்பு" "பைன்ராக்" "கோல்டன்ராக்" "ஷுகர் லோப்ராக்" "பிரெஞ்சுராக்" என்ற இடங்களில் நிறுத்தியிருப்பதாக,காப்டன் ஸ்மித்திடமிருந்து போகும் வழியில் காலியாட்டுக்குச் செய்தி எட்டியது. இதனல் திருச்சிராப்பள்ளியின் தென்முகத்தை அணுகுதல் அசாத்தியமாய் விட்டது. தவிரவும், சில பிரெஞ்சுஒற்றர்கள், ஆங்கிலவீரர்களுடன்கலந்திருப்பதாகத் தெரியவந்தது. காலியாட், அவர்களுக்குச் சந்தேகம் பிறக்காதவண்ணம், இவ்வொற்றர்களைத் தன் வீரர்களைக் கொண்டு கவனிக்கச்செய்தார். இவ் வொற்றர்களைக் கொண்டே இவர்களை நியமித்த அதிகாரிகளை ஏமாற்றிவிடலா மென்பதே அவர் கருத்து. படைகள், போதிய காலம் தங்கியபின், நன்கு போஜனமளிக்கப்பட்டன. பிறகு சேனைகள், மத்தியானம் இரண்டுமணிக்கு எலியாபுரத்திலிருந்துபுறப்பட்டு, சாயங்காலம் ஆறுமணிக்கு, தொண்டமான் காட்டிலுள்ள ஆவூர் என்ற கிராமத்திற்கு வந்து சேர்ந்தன. இக்கிராமம், திருச்சிராப்பள்ளியி லிருந்து பன்னிரண்டுமைல் தூரம். காலியாட், இப்பொழுது தன் பாதையைத் திருப்பி, "பைன்ராக்ஸ்" என்ற இடத்திற்கும் "ஷுகர்லோப்" என்ற விடத்திற்கும் நடுவிலுள்ள மைதானத்தில் தான் பிரவேசிக்க எண்ணியது போல், (அதாவது, எதிரியின் படை வரிசையின் மத்திப் பாகத்தில் போர்புரிய எண்ணியதுபோல்) இத் திக்கைநோக்கிச் சேனையை ஆறு மைல் நடத்தினர். இதற்குள் எட்டு மணியாய்விட்டதால், எங்கும் இருள் சூழ்ந்தது. பிரெஞ்சு

"ஒற்றர்கள், ஆங்கிலப் படைகள் பிரவேசிக்கப் போகும் இடத்தை நன்கறிந்துகொண்டோ மென மனமகிழ்ந்து, டிஆடியூலிடம் சொல்ல ஓடிவிட்டார்கள். அவர்களுள் ஒருவனுவது திரும்பிவரவு மில்லை. அவர்கள் சென்று அரை மணிநேரத்திற்கெல்லாம், காலியாட், தான் சென்றவழியை மறுபடியும் மாற்றித் தொண்டமான் காட்டிற்குக் கிழக்குப் பக்கமாகச் சென்று, "எலுமீசுரம்" என்ற இடத்திற்கு வந்தார். தெற்கில் காடுகள் வரையிலும், வடக்கில் காவிரி வரையிலும், மேற்கில் "பிரெஞ்சுராக்" என்ற இடம் வரையிலும், கிழக்கில் வெகுதூரத்திற்கும், இங்குள்ள நிலமெல்லாம் வயல்களே. இவ்வயல்கள், மிகச் சிறியபிரதேசங்க ளாதலால், ஒவ்வொன்றும், வழக்கம்போல், சிறு வரப்புக்களால் பிரிக்கப் பட்டிருக்கும். அறுப்புக் காலத்திற்குப் பதினைந்து நாட்களுக்கு முன்னரேயே, இவ்வயல்களில் நீர்நிறையும்படி பாய்ச்சியிருப்பார்கள். ஆகையால் அக்காலம்வரை வயல்களில் சகதி மிகுந்து, எங்கும் சதுப்பு நிலமா யிருக்கும். இப்பொழுது அவ்வாறே யிருந்தது. இவ்வித நிலத்தைச் சிப்பாய்களால் கடக்கமுடியா தென்றெண்ணி, பிரெஞ்சுக்காரர்கள், எலிமீசுரத்திலாவது காவிரிக்கரையி லாவது காவல் வைக்கவில்லை. இவ் அசட்டுத்தனமான செயலை அறிந்த காலியாட், இவ்விதமான உபாயம் செய்யலா மென்று எண்ணினர். படைகள் பத்து மணிக்கு வயல்களினூடே மேற்சென்றன. சிப்பாய்கள், தங்கள் கம்பெனியைச் சார்ந்த ஆங்கில ஸார்ஜெண்டுகளால் மேற்பார்க்கப்பட்டனர். தவிரவும், இந்திய சுபேதார்கள் தங்கள் கடமையை வழக்கமாய் நன்கு நிறைவேற்றுபவர்களே ஆயினும், ஜயமடைய இருட்டும் மௌனமும் வேண்டியிருந்த யிச் சந்தர்ப்பத்தில், யுத்தசிக்ஷையினுல்மட்டும் பயனில்லை. இவ்வளவு கஷ்டப்பட்டபின்பு, இன்னும் பிரயாசையான பாதையில்

"முன்செல்வதா, அல்லது பின்வாங்குவதா என்பது, ஒவ்வொரு வீரனுடைய மனப்பான்மையையே பொறுத்திருந்தது. காலை இரண்டுமணிக்கு, இரண்டு சிப்பாய்ப்பட்டாளங்கள் "பிரெஞ்சுராக்ஸு"க்கும் "ஷுகர்லோப்ராக்ஸு"க்கும் மத்தியாக, நகரத்துக்குள் பிரவேசிக்கும்படி அனுப்பப்பட்டார்கள். இச் செய்கையின் கருத் தென்னவெனில், தாங்கள் எதிர் பார்த்தவண்ணம் ஒன்றும் நிகழாமையால், எதிரிகள் ஒரு வேளை உண்மையைச் சமுசயித்து விட்டார்களோ என்பதே. ஆனால் "பிரெஞ்சுராக்ஸ்" ஸில் ஒரு காவலாளியேனு மில்லை. யாவரும் ஒற்றர்கள் கூறியவிடத்திற்குப் போய்விட்டார்கள். காலை நான்குமணிக்கு, இவ்விரண்டு பட்டாளங்களும், நகரத் தெற்குவாசலை யடைய, உடனே உள்ளேவிடப்பட்டனர். ஆனால் காலியாட்டும் மற்றப் பட்டாளங்களும், ஏழுமைல் தூரமுள்ள வயல்களை ஏழுமணிநேரத்தில் கடந்து, காவேரி தீரத்திலுள்ள சக்கிலிப்பாளையம் என்ற இடத்தை அடையுமுன், சூரியோதய சமயம் நெருங்கிவிட்டது. இன்னும் கடக்க இரண்டு மைல் இருந்ததெனினும், நகரத்தைத் தூரத்தில் நோக்கி யாவரும் மலர்ச்சியுற்றனர். பலவேலைகளால் மிகக்களைப் புற்றிருந்தபோதிலும், காலியாட்துரை, இரண்டு வீரருடன் முன்சென்றார். காப்டன் ஸ்மித், காலியாட்டின் வரவை யறிந்து, இவர்களைப் பாதுக்காக்கும்பொருட்டுத் தன் வீரர்களில் ஒரு பகுதியை யுத்த சன்னத்தராய் நிறுத்திவைத்திருந்தார். முற்றுகையை நீக்க வந்த ஒவ்வொருவீரனும், கோட்டைக்குள்ளிருந்தோரால், அகமகிழ்ச்சியுடன் வரவேற்கப்பட்டான். களைப்பாறுவதற்குச் சௌகரியங்களும் சிற்றுண்டிகளும் தயாராயிருந்தன. சூரியோதயமானபின், மைதானத்தில் தங்கியிருந்த பிரெஞ்சுப்படைகளுக்கு, அவர்கள் ஏமாந்ததை அறிவிக்கும்பொருட்டு, களிப்புடன் 21 குண்டுகள் சுடப்

"பட்டன. பிறகு நோக்கியதில், 300 சிப்பாய்கள் பின்வாங்கி யிருக்க, இரண்டு மூன்று ஆங்கிலேயரே பின்வாங்கி யிருப்ப தாகத் தெரிந்தது. டிஆடியூல் என்பவர், எதிரிகள் பீரங்கிக் குண்டால் தெரிவித்த இச் சமாசாரத்தை, முதலில் நம்ப வில்லை. பிறகு, தன் படைவீரர்கள் சிறைப்பிடித்துவந்த சிலரால் உண்மையை அறிந்து, அதிசயப்பட்டார். அன்று சாயங்காலமே காவேரியைத்தாண்டி ஸ்ரீரங்கம் தீவுக்குச் சென்று, கொள்ளிடம் வழியாக அவர் புதுச்சேரிக்குப் போய் விட்டார்."

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்

### காப்டன் காலியாட் மதுரைக்கு இரண்டாந்தரம் வருவதற்கு முன்னும் பின்னும் நடந்த செய்திகள்

**காலியாட்டும் தளவாய்முதலியாரும்** வடக்கி லிவ்வாறு உழைத்துக்கொண் டிருக்கையில், திருநெல்வேலியில் மாபுஸ் கானும் புலித்தேவனும் கலகம்செய்தனர். "குத்தகைக்காரரான முதலியாருக்குப் பொறுப்பாளிகளாயிருந்த எல்லாரும், தங் களுக்கே பொறுப்பாளிகள்" என்று, ஓர் விளம்பரத்தைப் பிர சுரித்தனர். களக்காட்டைக் கொடுப்பதாகக்கூறித் திருவாங் கூர் மஹாராஜாவின் உதவியை அவர்கள் தேடியது வியர்த்த மாயிற்று. பிரெஞ்சுக்காரராலும் சகாயம்புரிய இயலாது போய் விட்டதால், மாபுஸ்கான், ஆங்கிலருடன் சமாதானம் புரிந்தபின், திருநெல்வேலி, மதுரைக் குத்தகைகளைத் தானே கொள்ளலா மென வெண்ணினன். அவன் காலியாட்டுக்கு ஒரு கடிதம் எழுதினன். இக்கடிதம், ரம்போல்ட் துரை கை யில் அகப்படவே, அவர் உடன்படிக்கைத் தவணைகளை நிச் சயிக்க, இரண்டு ஜமேதார்களை மாபுஸ்கானிடம் அனுப்பி

ஞர். மாபுஸ்கான் ஐம்பது பீரங்கிகளுடன் வந்த இவ்விருவரையும் பிணையாட்களாகக் கொள்ளமுயன்றும், முடியவில்லை.

மாபுஸ்கான் திருநெல்வேலி நகரத்திற்குள் புகுந்து, அதைத் தன் வசமாக்கிக்கொண்டான். அவன் சில அழிம்புகளைப் புரிந்த பிறகு, பாளயங்கோட்டையைக் கைக்கொள்ள முயன்றான். ஆனால் வாஸோபா என்பவன் கட்டப் பொம்மனின் உதவியைக்கொண்டு, பாளையங்கோட்டையை மிக்க திறமையுடன் பாதுகாத்தான். மதுரையில் ஜமேதார்கள் உடன்படிக்கையை ஒத்துக்கொள்ளமுடியாமல் போனதினால், 1757-ம் வருஷம் ஜூன் மாதம் 9-ம் தேதி, யூஸப்கான் ஒரு சிறிய யுத்தம் புரியும்படிநேரிட்டது. இச்சண்டையில், அவர் உயிருக்கே அபாயம் உண்டாகவே, மதராஸ் கவர்ன்மென்டார், காலியாட்டை, ஓர் பெரும் சேனையுடன் சென்று அவரைப் பாதுகாக்க அனுப்பினர். தளவாய் குமாரசுவாமி முதலியாரும் அவருடன் சென்றார். கட்டப் பொம்மன் மதுரைக்கு ஆயிரம் வீரரை அனுப்பினான். சிவகங்கையி லிருந்தும் இராமநாதபுரத்திலிருந்தும் பட்டாளங்கள் வந்தன. நத்தத்துக் காடுகளில் அதுவரை ஒளித்திருந்த மாயனவும், காலியாட்டின் பக்கம் சேர்ந்துகொண்டான். நபிகான் இராமநாதபுரக் காடுகளில் ஒளித்திருந்தான். மாபுஸ்கானவது, ஹைதரலியாவது, பார்க்கதுல்லாவும் ஜமேதார்களும் கேட்டுக்கொண்டபடி, அவர்களுக்கு உணவுப்பொருள்கள் அனுப்பவில்லை. கடைசியில், செப்டம்பர் மாதம் ஏழாந் தேதியன்று, லக்ஷத்தெழுபதினாயிரம் ரூபாய் கொடுத்தால் கோட்டையை விட்டுவிடுவதாக, பார்க்கதுல்லாவும் எதிரிகளும் சம்மதித்தனர். ஆனால் மாபுஸ்கானும் அவன் ஆட்களும் புரிந்த சேதங்களுக்கு, தாங்கள் பொறுப்பாளிக ளில்லையென்றனர்.

எட்டாம் தேதியன்று, காலியாட்டையும் யூஸப்கானையும் தளவாய் முதலியாரையும் திருச்சிராப்பள்ளி முத்தழகுப் பிள்ளையையும் வரவேற்க, மதுரைக் கோட்டை வாயில்கள் திறக்கப்பட்டன.

பிரெஞ்சுக்காரருக்கு ஐரோப்பாவிலிருந்து புதிய படைகள் வந்துள்ளன வென்ற வதந்தி யெட்டியதால், காப்டன் காலியாட், மாபுஸ்கானை யடக்கும்படி யூஸப்கானை விட்டுவிட்டு, தான் திருச்சிராப்பள்ளியைப் பாதுகாக்கச் சென்றார். இப்பொழுதும் தளவாய் முதலியார் காலியாட்டுடன் சென்றார். மாபுஸ்கான், பிரெஞ்சுக்காரரின் உதவியை எதிர் பார்த்துக்கொண்டு, உடன்படிக்கைக்குச் சம்மதிக்க வில்லை. ஆனால் அக்டோபர் எட்டாம் தேதி, யூஸப்கான் திருச்சிராப் பள்ளி போகக் கட்டளையிடப்பட்டதினால், இவ்விஷயத்தில் அவரால் மேற் செல்ல முடியவில்லை. பனிகாலம் தொடங்கிய பின், யூஸப்கான் மதுரைக்குத் திரும்பிவந்தார். ஏனெனில் ஹைதர் அலி ஒரு பெரும் படையுடன் திண்டுக்கல்லுக்கு வந்திருப்பதாக அவருக்குச் செய்தி எட்டியது.

அவர் திரும்பிவந்தவுடன் கொடும் போர்புரிய வேண்டியதாயிற்று. ஆனால், இதற்குள் சோழவந்தானைக் கைப்பற்றியிருந்த ஹைதரை, யூஸப்கான் தோற்கடித்து அவ்விடத்தை மறுபடியும் கைக்கொண்டார். பிறகு திருநெல்வேலி செல்ல, மாபுஸ்கான் நெக்கட்டஞ் செவலுக்கு ஓடியிருப்பதாகத் தெரிந்தது. களக்காட்டில் யூஸப்கான் திருவாங்கூர் அரசர் படைகளைத் தோற்கடித்தார். பாம்பன்குளம், ஆழ்வார் குறிச்சி, பிரமதேசம், முதலிய விடங்களில் படைகளை நிறுத்திவிட்டு, நவம்பர் கடைசியில் திருநெல்வேலி வந்து சேர்ந்தார். பிறகு ஹைதர் அலியும், பிரெஞ்சுக்காரரும் எதிர்க்கா வண்ணம், சோழவந்தான் கோட்டையை பத்திரப்படுத்த,

அவர் வடக்கே செல்லுதல் அவசியமாயிற்று. இதற்குள் தளவாய் முதலியார் கவர்ன்மெண்டிற்குரிய தொகையின் மீதியைச் செலுத்தும் வண்ணம், மதராசுக் கழைக்கப்பட்டார். இவ்வாறு மாபுஸ்கான் கட்சியார் நாட்டைச் சூறையாடிக் கொண்டிருக்கையில், வரிகளை வாங்க இயலாதென்பது கவர்மெண்டாருக்கு விளங்கிற்று. அவனை வடக்கே அழைத்து, அவன் படைவலியைச் சிதைக்க, கவர்ன்மெண்டார் தீர்மானித்தனர். நவாபு, பெப்ரவரி 1758-ல், மாபுஸ்கானை ஆற்காட்டிற்கு வரும் வண்ணம் இசையச் செய்யத் தன் காரியஸ்தர் ஒருவரை அனுப்பினார். மாபுஸ்கான், மிக்க பணிவுள்ளவன் போல் காட்டிக்கொண்ட போதிலும், உடனே வராமல் புலித்தேவனுடன் கிராமங்களை முன்போல் சூறையாடினான். இதற்குள், பிரெஞ்சுக்காரர், டேவிட் கோட்டையைப் பிடித்துவிட்டதால், யூஸப்கான் வடக்கே செல்லும்படி நேரிட்டது. உடனே எதிரிகள் ஒன்றுசேர்ந்து, எங்கும் கொள்ளையடித்துத் திருநெல்வேலிச் சிப்பாய்களை விரட்டிவிட்டு, நகரத்தைக் கைக்கொண்டனர். கட்டப் பொம்ம நாயக்கனும் எட்டையாபுரப் பாளையக்காரரும்கூட, மாபுஸ்கான் பக்கம் சேர்ந்துவிட்டதால், யூஸப்கான் மறுபடியும் வடக்கேயிருந்து வந்தார். கொல்லங்கொண்டான், கொல்லார்பட்டி, என்ற விடங்களில், யூஸப்கான், மாபுஸ்கானையும் மற்றப் பாளையக்காரரையும் தோற்கடித்துத் திருநெல்வேலி போய்ச்சேர்ந்தார். அப்பொழுது மாபுஸ்கான், தனக்கொரு ஜாகீர் தருவதாயிருந்தால், ஜில்லாவை விட்டுப்போவதாகக் கூறினான். இறுதியில், ஜனவரி 1760-ல், அவன் ஆற்காடு போய்ச்சேர்ந்தான்.

ஊற்றுமலைப் பாளையக்காரரை அடக்கி விட்டபின், யூஸப்கானை எதிர்க்க, புலித்தேவனும் கட்டப்பொம்மனும் தான்

இருந்தனர். முன்பே நேசம்செய்து கொண்ட திருவாங்கூர் அரசரின் உதவியைக்கொண்டு, யூஸப்கான், புலித்தேவன், இசல்தேவன் இவர்களின் கோட்டைகளை யெதிர்த்தான். இறுதியில், வாசுதேவநல்லூ ரென்ற ஊரில், புலித்தேவனின் சேனைபலத்தால் உண்டாகிய நஷ்டம் மிகுதியாயிருந்த போதிலும், யூஸப்கான் திருவாங்கூர்ப் படைகளைத் திருப்பியனுப்பி, ஜயத்துடன் திருநெல்வேலிக்குத் திரும்பிவந்தார்.

1760-ல் மேபீ கட்டப்பொம்மனையும், அவன் 3,000 ஆட்களையும், யூஸப்கான் மிகவீரத்துடன் துரத்தினர். 1761-ல் ஹைதர்அலி திண்டுக்கல்லில் புரிந்தகலகமும், தூத்துக்குடி, ஆழ்வார்திருநகரி, மணப்பாடு முதலிய விடங்களில் டச்சுக்காரர் புரிந்த கலகங்களும், பாளையக்காரரின் சூறைகளும், முடிவுற்றன. ஏனெனில், அந்தவருஷத்தில் புதுச்சேரி ஆங்கிலேயர் வசமாயிற்று. நெல்ஸன்துரை இச் சந்தர்ப்பத்தில் கூறுவது யாதெனின்:—

"1761 ஜனவரியில் பாண்டிச்சேரியை ஆங்கிலேயர் கைக்கொண்டதனுல், அதுவரை எதிர்த்த பாளையக்காரர்கள், சிறிது அச்சமுற்று அடங்கினர்கள். தவிரவும் மாபுஸ்கான் திருநெல்வேலியைவிட்டுச் சென்றதினுலும், அவனும் அவன் சகோதரனும் ஓத்துப்போய் விட்டதாலும், கலகஞ் செய்ய எவ்விதச் சாக்கும் இல்லை; ஆகையால் இதுவரை பல்லாண்டுகளாக இல்லாத அமைதி, தேசமெங்கும் இப்பொழுது பரவிற்று. இவ்வமைதி நீடித்திருக்குமென நினைப்பதற்கும் காரணங்கள் இருந்தன."

மதுரை, திருநெல்வேலிக் குத்தகையைப்பற்றி, 1759-ல் ஒரு சச்சரவுண்டாயிற்று. கவர்ன்மெண்டாருக்கு வருஷா வருஷம் ஐந்துலக்ஷம் ரூபாய் கட்டுவதென்ற நிபந்தனையின் மேல், யூஸப்கான், குத்தகைக்காரராக விரும்பினர். ஆனல்

கலகங்கள் நேரிடும் முன்னமே தளவாய் முதலியார் பதி னைன்று லக்ஷம் கட்டிக்கொண்டிருந்தார். இவ்விஷயம், முதலியாரின் அதிகாரத்திற்கும் திடநம்பிக்கைக்கும், கலக முடிந்த பின்னும் தன்னலமே கருதும் யூஸப்கானின் நடத் தைக்கு முள்ள பேதத்தை, நன்கு விளக்குகின்றது.

மதுரையையும் பாளையங்கோட்டையையும் 1761-ல் ஆங்கிலேயர் கைக்கொண்டபின்னர், யூஸப்கான் 7-லக்ஷம் ரூபாய் தருவதாகக் கூறினார். குமாரசுவாமி முதலியாரின் சகோதரராகிய தீத்தாரப்ப முதலியார், அதிகம் தருவதாகக் கூறினார். ஆனால் குத்தகையை யூஸப்கானே கொள்ள, கவர்ன் மெண்டார் அனுமதித்துவிட்டனர். அது முதற்கொண்டு மதுரையையும் திருநெல்வேலியையும் கைக்கொள்ள யூஸப் கான் விடாமுயற்சிபுரிந்தார். கவர்ன்மெண்டார் கட்டளையை மீறி, 1762-ல், அவர் திருவாங்கூர் அரசனுடன் போர்புரிந் தார். அவர் குத்தகையை உடனே கவர்ன்மெண்டார் பிடுங் கிவிட்டனர். மறுபடியும் தனக்குக் குத்தகையைக் கொடுக் கும்படி யூஸப்கான் வேண்டியதற்கு கவர்ன்மெண்டார் சம் மதிக்கவில்லை. 27,580 சிப்பாய்களுடனும், மார்ச்ன்ட் என்பவர் தலைமையின் கீழ் ஓர் பிரெஞ்சுபட்டாளத்து டனும், ஹைதர் அலியின் வீரர்களுடனும், யூஸப்கான் வேறு வழிகள் தேட ஆரம்பித்தார். 1763-ல், ஜெனரல் லாரன்ஸ் அவரை எதிர்த்தார். 1764-ல் மார்சன்ட் என்பவர் யூஸப்கானை ஆங் கிலேயருக்குக் காட்டிக் கொடுத்து விட, யூஸப்கான் தூக்கி விடப்பட்டார்.

## பதின்மூன்றும் அத்தியாயம்

### யூஸப்கான் மரணத்திலிருந்து நாவாப்பை விட்டுப் பிரிட்டிஷார் கைவசம் துரைத்தனம் மாறியது வரையும்

**யூஸப்கான் இறந்தபின், ஆறு வருஷங்களுக்கு,** அபிரால்கான் சாயபு என்பவர், மதுரைச்சீமை நிலவரிக் குத்தகையை மட்டும் நடத்திவந்தார். அவருக்கு இராணுவ சம்பந்தமான அதிகாரமே யில்லை; இராணுவ விஷயங்கள் பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர் அதிகாரத்திலிருந்தன. 1780–வரை இவ்வண்ணம் விசேஷசம்பவம் யாது மின்றி, இராஜ்ய பரிபாலனம் நிகழ்ந்தது. அதற்குள் மைசூர் அதிபதியாகிவிட்ட ஹைதர் அலி, கருநாடக சீமை மீது அந்த ஆண்டில் படையெடுத்து வந்து, கொள்ளையும் கொலையுமாய் நாடெங்கும் சுட்டுப் பொசுக்கிப் பாழ்செய்யலானுர். திருநெல்வேலிச் சீமையை 1764–ல் தளவாய் அழகப்ப முதலியாரும், 1765–1769–ம், ஆண்டுகளில் ஹுகுமத் ராமராஜாவும், 1770–ல் ஷேக்முகம்மதலியும், கண் காணித்துவந்தனர். 1771–முதல் 1775–வரை ஸையிது முகம்மதுகான் ஆண்டுவந்தார். அவர் ஆட்சியில் நடந்த இரண்டு சம்பவங்களை இங்கே கூறுதல் பொருந்தும். 1771–ல் திருநெல்வேலி கச்சேரிக்கட்டடம் சகலதஸ்தாவேஜுகளோடும் தீப்பற்றி யெரிந்து சாம்பராயிற்று; 1774–ல் மிகக்கொடிய பஞ்சம் நாட்டை வருத்திற்று. கருநாடகத்தில் நடந்த கலகக் குழப்பங்களைக் கண்ட பாளையக்காரர், அதுவே தக்கசமயமென் றெண்ணி, 1780–ம் ஆண்டிலே சுவாதீனமடையக் கலகஞ்செய்து, நாட்டிற் பெரும்பாகத்தைக் கைக்கொண்டனர். இதனல் எட்டுலக்ஷம் சக்கிரமாயிருந்த வருஷ வருமானம் சராசரி அரைலக்ஷமாகிவிட்டது.

இக் கலகங்கள் ஒடுங்கின விவரங்களை இனிக்கூறுவோம். திருவாங்கூர் அரசர் களக்காடு பனகுடி திருக்குறுங்குடி செங்கோட்டை முதலிய இடங்களில் செய்த கலவரங்களை, 1765-ம் ஆண்டில், கர்நல் காம்பல் அடக்கி நிறுத்தினர். 1766-ல் பாஞ்சாலங்குறிச்சி கொல்லங்கொண்டான் வாசுதேவநல்லூர்களில் சில்லறைக் கலவரங்கள் நிகழ்ந்தன.

1767-ல் நவாபின் தளகர்த்தர்கள் நீங்கி அங்கிலேய தளகர்த்தர்கள் அதிகாரம் பெற்றவுடன், இவை யடங்கி விட்டன. 1768-ல் காமைய நாயக்கர் என்னும் பாளையக் காரரை காப்தன் ப்ரௌன் வென்றடக்கினர். ஹைதர் அலியின் சகாயத்தைக் கோரின சிவகிரிப் பாளையக்காரனை யடக்க, 1777-ல் காப்தன் பிக்கார்டு படையெடுத்துச் சென்றார். இந்தப் பாளையக்காரன், 1781-ம் ஆண்டில், பிரிட்டிஷாரைத் தொலைத்தற் கென்றே ஹைதர் அலியுடன் சேர்ந்துகொள்ளும்படி, நவாபின் காரியஸ்தரையும் திருப்பி விட்டார். அக் காலத்தில்தான் இரண்டாவது மைசூர் யுத்தம் மும்முரமாய் நடந்துகொண் டிருந்தது. பாளையக் காரர்கள் எல்லோரும் ஹைதரலியின் ஆட்களுடன் சேர்ந்து, ஊர்களி லெல்லாம் கொலைசெய்தும் தீவைத்தும் நாசமாக்கத் தலைப்பட்டனர். கட்டப் பொம்ம நாயக்கன் தூத்துக்குடியிலே டச்சுக்காரருக்கு உதவி செய்துகொண் டிருந்தான். 1781-ம் ஆண்டு, ஜுலை மாதம், முதல்தேதியன்று, போர்டுநோவோ சண்டையில் ஸர் அயர் கூட் என்பவர் ஹைதர் அலியை முறியடித்த பின்னரே, இந்தக் கலகக்காரர்கள் ஒடுங்கி அடங்கினர். யுத்தம் நின்ற பிறகு, நவாபினல் வரிதண்ட முடியவில்லை,யுத்தச்செலவுகளைக் கொடுக்கவும் முடியவில்லை. ஆகையால், அவர், திருநெல்வேலி, மதுரை, திருச்சிராப்பள்ளி ஜில்லாக்களை, பிரிட்டிஷாரிடம் ஒப்படைத்து, சகல உரிமைகளை

யும் அதிகாரங்களையும் அவர்களுக்கே கொடுத்துவிட்டார். வரிதண்டுவதும் நாடுகாவலும் அவர்கள் இஷ்டம்போலாய் விட்டன: அவர் குடும்பச்செலவுக் கென்று வருமானத்தில் ஆறிலொரு பங்குமட்டும் நவாபு பெறுவது தவிர, இராஜ்ய பரிபாலனத்தில் அவருக்கு யாதொரு சம்பந்தமும் இல்லாமற் போயிற்று.

தளவாய் குமாரசுவாமி முதலியாரின் குமாரர் தளவாய் திருமலையப்ப முதலியார், 1765 முதல் 1782 வரை, திருநெல்வேலிச் சீமைக் குத்தகைதாரரா யிருந்தார். பிரிட்டிஷ் கம்பெனியாருக்காகக் குத்தகைப் பணத்தைப் பெறும் உத்தியோகஸ்தரான பிராக்டர் துரைக்கும் அவருக்கும், 1782-ம் வருஷத்தில், குத்தகை சம்பந்தமாக விவாத முண்டாயிற்று. துரைத்தனத்தார் முதலியார் பக்ஷமே தீர்மானஞ்செய்தனர். பிஷப் கால்ட்வெல், இந்த வழக்கின் விவரங்களைப் பின்வருமாறு கூறியிருக்கிறார்:—“1782-ம்வருஷம்ஏப்பிரல் மாதத்தில், ப்ராக்டர் துரை, குத்தகைக்காரர் திருமலையப்ப முதலியாரைப்பற்றி, துரைத்தனக் கமிற்றியாருக்குப் புகார் எழுதியனுப்பினார். முதலியார், சர்க்காருக்குரிய தானியவிலையை அதிகம் உயர்த்திவிடுகிறாரென்றும், தன் சொற்படி நடவாமல், காப்தன் கிப்பிங்ஸ் சொல்வதையே கேட்கிறாரென்றும், பாளையக்காரருக்கு உளவாயிருந்து அநுகூலஞ்செய்கிறாரென்றும் அவர் குறைகூறி; முதலியாரை நீக்கி, வேறொரு குத்தகைக்காரரை நியமித்து, குத்தகைக்காரர் எப்பொழுதும் ரிஸீவராகிய தன் அதிகாரத்துக்குள் இருக்கும்படி செய்யவேண்டுமென்றும் எழுதினார். திருமலையப்ப முதலியாருக்குப் பதிலாக, அவர் மருமகன் தீத்தாரப்ப முதலியாரைக் குத்தகைக்காரராக்க வேண்டுமென்று முதலில் எழுதினார்; அப்பால், மதுரையில் அமில்தாரா யிருந்த ரெங்கராயர் என்ற அன்

ணியரைக் கொண்டுவந்து குத்தகைக்கார ராக்க வேண்டு மென்று சிபார்சுசெய்தார். அதே சமயத்தில், குத்தகை திருமலையப்ப முதலியாரும் ப்ராக்டர்துரையின் மேல் புகார் செய்து, கமிற்றியாருக்கு எழுதினர்; கம்பெனியாரின் சிரஸ் ததாரும் புகார் செய்தார்; தளகர்த்தருக்கும் ப்ராக்டருக்கும் பெரிய மனஸ்தாபமு மிருந்தது. காப்தன் கிப்பிங்ஸூம், திரு நெல்வேலியிலுள்ள அவர் கீழ் உத்தியோகஸ்தர்களும், குத் தகை விஷயத்தில் எவ்விதத்திலும் தலையிடக்கூடா தென்று கமிற்றியார் ஆஜ்ஞாபித்தனர்; ப்ராக்டர்துரை செய்த மற்றச் சிபார்சுகளில் எதையும் கமிற்றியார் அங்கீகரிக்க வில்லை. அது வுமன்றி, அகவிலை விஷயத்தில் அவர் தலையிட்டதற்கும், வரவு கணக்கொன்றுமே தமக்கு அனுப்பாததற்கும், ப்ராக் டர்துரையைக் கண்டித்துப் பதில் எழுதியினுப்பினர். அது முதல் மாதம் தப்பாமல் தமக்குக் கணக்கனுப்பும்படி அவருக் குக் கட்டளையிட்டனர். ப்ராக்டர் துரையின் மேற்பார்வை யில் அதிருப்திகொண்டு, கமிற்றியார், குத்தகைவசூல் விஷய மாக வேறு சில ஏற்பாடுகளையும் செய்யலாயினர்.

அப்பொழுது சென்னையில் கவர்னர்,மக்காற்ட்னி பிரபு. அவர், 1780 ஜனவரி 28-ம் தேதியன்று, கமிற்றியாரிடம் முழு அதிகாரம் பெற்றுச் சென்று திருநெல்வேலிச்சீமை விஷயங்களை விசாரணை செய்யும்படி, இர்வின் துரையைக் கமிஷனராக அனுப்பினர். இரு கட்சியாரும் செய்து கொண்ட புகார்களிலும், ஒருவர்மேலொருவர் சாத்திய குற்றங்களிலும், எது பொய் எது மெய்யென்று துரைத் தனத்தாருக்கு விளங்காததால், தன் யுக்தத்திலே மெய்யாத் தோன்றுவனவற்றையும், முக்கியமாய், தானிய அளவிலும் நாணயமாற்றிலும் ப்ராக்டர்துரை ஓரவஞ்சகமாக நடந்தா ரென்று தளவாய் திருமலையப்ப முதலியார் செய்த புகா

-ரைப்பற்றியும், விசாரணைசெய்யும்படி, கமிஷனர் இர்வி னுக்குக் கட்டளையிட்டனர். திருநெல்வேலி சென்றடைந்த வுடன், கமிஷனர் இர்வின், தன் தலைமைக்கீழ் ஒரு நியாய விசாரணைச் சபையைக்கூட்டி, இவ் விஷயங்களைப்பற்றி விசாரணை செய்ததில், ப்ராக்டர்துரையின் கணக்குக்கள் திருப்திகரமா யில்லை யென்று, சபையார் தீர்மானித்தனர்.

மேற்கூறிய திருமலையப்ப முதலியாரின் ஒன்றுவிட்ட சகோதரரின் குமாரரான தளவாய் தீத்தாரப்ப முதலியார், 1782 முதல் 1790 வரை, திருநெல்வேலிக் குத்தகைக்காரரா யிருந்தார். அவரே கடைசிக் குத்தகைக்காரர். அவர் காலத் தில்தான் தென்னடுகளில் கலவரங்க ளொழிந்து, சமாதான நிலைமை யேற்பட்டது. அதன் விவரங்களைச் சுருக்கிக்கூறு வோம்: 1780-ம் ஆண்டிலே, பாளையக்காரர் ஏவினல் உடனே கலகஞ்செய்யச் சித்தமாக, நாட்டிலே நூறுயிரம் பேர் இருந் தனர். அவர்களுக்குள் சிவகிரிப் பாளையக்காரரும் கட்டப் பொம்மநாயக்கருமே பேர்போன முக்கியஸ்தர். கட்டப் பொம்ம நாயக்கரின் கீழ் ஒன்பதினயிரம் தலைக்கட் டுண்டு. கர்னல் புல்லற்டன் அவர்களை ஒடுக்கி யடக்கியபின், தாங்கள் போரொழிந்து, அதுவரை கொடுக்கவேண்டிய கப்பப் பாக்கி யில் ஒருபகுதி கொடுக்க, அவர்கள் உடன்பட்டனர்.

கர்னல் புல்லற்டன் எழுதிய புஸ்தகத்தில், குத்தகைக் காரராய் இருந்து நாட்டை யாண்டுவந்த தளவாய் முதலியா ரின் அமுலும் அதிகாரமும் விளங்கக் கூறப்பட்டிருக்கின்றன. புல்லற்டன் திருநெல்வேலியை விட்டு வெளியேறிய பின், அவரால் அடக்கப்பட்டவர்கள் மீண்டும் தலை நிமிரலாயினர்.

1785-ம் ஆண்டிலே, முன்னிருந்த வரிதண்டு முறை யொழிந்து, நவாபு, தன் காரியஸ்தர் மூலமாக வரிதண்டத் தொடங்கினர். கம்பெனியாருக்கு ஆண்டுதோறும் குறித்த

படிகப்பம் கட்டிவிட ஒப்புக்கொண்டு, அதன் பொருட்டு நாட்டிலொருபகுதியை அவர்களுக்கு அடைமான மாக்கினுர். 1785 முதல் 1790 வரை, இக்டிபர்கான் என்பவர், நவாபின் காரியஸ்தராகித் தென்னுடுகளின் வரிவசூலை மேற்பார்த்துவந்தார். அவர் ஆட்சி மிகக்கொடியதா யிருந்தது; குடிகள் ஊர்களை விட்டோடி, மலைகளுக் கப்பாற் சென்று ஒளிக்கலாயினர். தளவாய் தீத்தாரப்ப முதலியாரின் மைத்துனரான பட்டணம் இராமலிங்க முதலியார் என்பவரை, இந்த இக்டிபர்கான் அதிகம் இம்சை செய்தா ரென்று, தளவாய் முதலியார் குடும்பத்திலே கர்ணபரம்பரையாய்ச் சொல்லுகின்றனர்.

தங்களுக்குக் கொடுக்கவேண்டிய கடன் தொகைகளை நவாபு ஒழுங்காகக் கொடாமையால் அதிருப்தி கொண்டு, நவாபின் சம்மதமின்றியே, நவாபின் இராச்சியத்தையும் தஞ்சாவூர் அரசையும் தாங்களே பறிமுதல்செய்து கைக்கொண்டு விட்டதாக, இங்கிலீஷ் கம்பெனியார், 1790-ம் வருஷத்தில் விளம்பரஞ் செய்தனர். இதுவே (Assumption) பறிமுதல் என்னப்படுகிறது. அப்பால் சென்னைத் துரைத்தனத்தார், ரெவினியூ போர்டாரையும் ஜில்லாதோறும் கலெக்டர்களையும் நியமித்தனர். இந்த ஏற்பாட்டின்படி, திருநெல்வேலி ஜில்லாவுக்கு முதல் கலெக்டராய் வந்தவர் பெஞ்சமின் டோரின் என்பவர். "கடைசிக் குத்தகைதாரரான தீத்தாரப்ப முதலியார் வசூல் செய்து வந்த வரிப்பணத்தைத் தன்னிடம் கொடுக்கும்படி இவர் ஓயாது பாடுபட்டும், ஒன்றும் பலிக்கவில்லை'' என்று, இந்த டோரின்துரையைப் பற்றி, பிஷப் கால்ட்வெல் எழுதியிருக்கிறுர்.

நவாபும் இங்கிலீஷ் ஈஸ்டிந்தியா கம்பெனியாரும் தத்தமக்குரிய அதிகாரங்களை வரையறுத்து, 1792 ஜுலை 12-ம்

தேதியன்று ஓர்உடம்படிக்கை செய்துகொண்டனர்: இதன் படி பாளையக்காரரிடம் திறைவசூல் செய்வது, கம்பெனியார் பொறுப்பாயிற்று. பாளையக்காரர் கொடுக்கவேண்டிய திறை களை வசூலிக்கவோ, அது சம்பந்தமாக நிகழும் சண்டைச் செலவுகளைக் கொடுக்கவோ, நவாபு கடமைப்பட்டவரில்லை என்றாயிற்று. கம்பெனியாருக்குச் செல்லவேண்டிய கடன் களை முற்றும் இறுக்கும் வரையும், கம்பெனியார் திருநெல் வேலி மதுரை திருச்சிராப்பள்ளி ஜில்லாக்களைத் தம்வசமே வைத்திருப்பதென்றும், மற்றச் சீமைகளைச் சில நிபந்தனை களின்மேல் நவாபுக்குத் திருப்பிக் கொடுத்துவிடுவதென்றும், தீர்மானிக்கப்பட்டன.

1790-முதல் 1800 வரை, பல கலவரங்கள் நிகழ்ந்து, பத்தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கத்தில்தான் பாளையக் காரர் கலகங்களும் குழப்பங்களும் ஒடுங்கி,அமைதியும் ஒழுங் கும் உண்டாயின. கர்னல் புல்லற்டனால் ஒடுக்கப்பட்ட பாஞ் சாலங்குறிச்சிக் கட்டபொம்மநாயக்கரும், சிவகிரிப்பாளை யக் காரரும், புலித்தேவருடன் சேர்ந்துகொண்டனர். 1791-ல் கர்னல் மாக்ஸ்வெல்,அவர்களை எதிர்த்துப்பொருதார். 1792-ல் சிவகிரி, சொக்கம்பட்டி, செவ்வல்குடித்தலைவர்கள் ஒருவாறு கீழ்ப்படிந்தனர். 1793-ல் புலித்தேவரும் அவர் கட்சியாரும் கொள்ளை, கொலை, கலகங்களைச் செய்யவே, கட்டபொம்ம நாயக்கரும் அப்படியே செய்யலானார். 1794-ல் பாளையக்காரர் கள் பெரும்பாடியாய்க் கிளம்பிக் கலகஞ்செய்தனர். 1794-ல் சிவகிரிப்பாளையக்காரர் மீண்டும் அழிம்புகள் செய்யலானார்; அவ்வாண்டில்தான் தூத்துக்குடி அங்கிலேயர் கைவசமா யிற்று. 1796-ல் சொக்கம்பட்டிப் பாளையக்காரரும் கலகக்கார ருடன்சேர்ந்துகொண்டனர். 1797-ல் திருநெல்வேலிச்சீமைப் பாளையக்காரர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து கிளம்பித்

துரைத்தனத்தை எதிர்த்தனர். 1798-ல் கட்டப்பொம்ம நாயக்கர் கம்பெனியாரை அலக்ஷியம் செய்து, திறைகொடுக்க மறுத்து விட்டு, பெரும்படையுடன் கொலைகளாலும் கொள்ளைகளாலும் நாட்டைப் பாழாக்கலானார்.

1799-ம் ஆண்டிலே, அங்கிலேயர், தாம் கவனித்தற்குரிய விரோதிகள் வேறெவருமின்றி, தென்னாட்டுப் பாளையக்காரர்களை அடக்க முழுமுரமாய்ப் பிரயத்தனஞ்செய்தனர். மேஜர் ஜான் பானர்மன் என்பவர், 1799 ஆகஸ்டு மாதத்தில் தெற்கே வந்து சேர்ந்தார். கட்டப் பொம்மநாயக்கருக்கு நாகலாபுரம், கொல்லார்பட்டி, ஏழாயிரம் பண்ணை, கடல்குடி, குளத்தூர், ஆவிடையாள்புரம் (நெக்கட்டன் செவ்வல்) சிவகிரி, வடகரை (புலித்தேவர்,) இத்தனை பாளையக்காரரும் உதவி செய்தனர்; எட்டையாபுரம், ஊற்றுமலை, சொக்கம்பட்டி, தலைவன் கோட்டை, மணியாட்சி, மேல்மாந்தை பாளையக்காரர்கள், மேஜர் பானர்மனுக்குத் துணையாயினர். பாஞ்சாலங் குறிச்சியில் நடந்த முக்கியமான சண்டையில், அங்கிலேயர் கீர்த்தியுடன் ஜெயமடைந்து, எதிரிகளைப் புறங்காட்டியோடச்செய்தனர். பாஞ்சாலங்குறிச்சிப் பாளையப்பட்டுக்குரிய சகோதரர் மூவர்கள், 'கட்டப் பொம்மன்' என்றபட்டப் பெயரைக் கொண்டிருந்தனர். அவர்களில், வீரபாண்டியன் என்னும் இயற்பெயரையுடைய மூத்த சகோதரனை, புதுக்கோட்டைச் சீமையிலே கண்டுபிடித்து, பானர்மன் முன்னே கொண்டுவந்து நிறுத்த, அவர், அவனைக் கயத்தாற்றூரில் தூக்கில் போட்டுவிட்டார். மற்ற இரண்டு சகோதரர்களில் ஒருவன், பாளையங்கோட்டைச் சிறைச்சாலையில் வைக்கப்பட்டான். மற்றப் பாளையக்காரர் சிலர் சென்னைக் கனுப்பப்பட்டனர். ஏழாயிரம்பண்ணை, நாகலாபுரம், கொல்லார்பட்டி, கடல்குடி, குளத்தூர், பாஞ்சாலங்குறிச்சிப் பாளையங்களைப் பறி

முதல் செய்து, அவ்வூர்களி லிருந்த கோட்டைகளைத் தட்டி நிரத்தி, அப் பாளையக்காரர்க ளிடமிருந்த ஆயுதங்களும் பறி முதல் செய்யப்பட்டன. அப்பால் பானர்மன் இங்கிலாந்து போய்விட்டார். பானர்மன் இவ்வாறு பாளையக்காரர்களை ஒடுக்கியடக்கிய பின்புங்கூட, கட்டப்பொம்ம நாயக்கரைச் சேர்ந்தவர்கள், சிறையிலிருந்த மற்ற இரண்டு சகோதரரான குமாரசுவாமி நாயக்கர், ஊமையன் என்ற சுப்பா நாயக்கர், இருவரையும் சிறையினின்று விடுதலைசெய்து, ஐயாயிரம் படைவீரர்களைச் சேர்த்து, மீண்டும் பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டையைக்கட்டி,யுத்தசந்நத்தராயினர். மேஜர் மக்காலே என்பவர் தன்னாலானமட்டும் முயன்றுபார்த்தும், அக்கோட் டையைப் பிடிக்க முடியவில்லை. மலையாளத்திலும் திருச்சிராப் பள்ளியிலு மிருந்து சைநியங்களைத் திரட்டிக்கொண்டு வந்து, கர்னல் ஆக்நூ என்பவர், பாஞ்சாலங்குறிச்சியிலே பின்னும் ஒரு பெருஞ் சண்டைசெய்து, கோட்டையை யிடித்துத்தகர்த்து நிரத்தி, எதிரிகளில் ஆயிரம்பேரைக் கொன்றார். அப்பால், சகோதரர் இருவரும், ஈராயிரம் படைகளுடன் ஓடிப்போய், மருது என்னும் சிவகங்கைப் பாளையக்காரரிடம் அடைக் கலம் புகுந்துகொண்டனர். இருபதினாயிரம் மறவர்கள் அவர்களுக்குத் துணைநின்றார்கள். சிறுவேலியிலும் காளை யார் கோயிலிலும் சண்டைகள் நிகழ்ந்தன. 1800 அக்டோபர் மாதம் முதல் தேதியன்று, ஆக்நூ, எதிரிகளைச் சிறைப்பிடித் தார். மருதுக்குப் பதிலாக வேறொருவரைச் சிவகங்கைப் பாளையத்துக்கு நியமித்தார். கட்டப்பொம்ம சகோதரர் இரு வரையும் பாஞ்சாலங்குறிச்சியிலே தூக்கிலிட்டபின்பு, அவ் வூர்க் கோட்டையைத் தட்டி நிரத்தி உழுது, ஆமணக்கு விதைக்கப்பட்டது. பாஞ்சாலங்குறிச்சிக்குத் தெற்கிலுள்ள பிரதேசங்கள் மணியாட்சிப் பாளையக்காரருக்கும், கடல்குடி

குளத்தூர்ப் பாளையப்பட்டுக்களின் ஒரு பாகம் மேல்மாந்தைப் பாளையக்காரருக்கும், கொடுக்கப்பட்டன. கம்பெனியாரை எதிர்த்துப் பொருத பாளையக்காரர்களின் பூமிகளைப் பறிமுதல் செய்து, அவற்றில் மூன்றிலிருபாகம் எட்டையாபுரம் பாளையக்காரருக்குக் கொடுக்கப்பட்டது. பாளையக்காரர் இரண்டாவது யுத்தம் இவ்வாறு முடிவுபெறவே, 75 ஆண்டுகளாக நிகழ்ந்த கலகங்களும் குழப்பங்களும் ஓய்ந்து, பிரிட்டிஷாரின் நல்லாட்சியில் சமாதானம் நிலைத்து, செல்வம் செழிக்கலாயிற்று.

முடிவில், 1801-ம் ஆண்டிலே, கருநாடகராஜ்ய முழுதும் நவாபைவிட்டுப் பிரிட்டிஷார் கைவசமான விவரங்களைக் கூறுவோம்: நவாபு முகம்மதலியும், அவர் மருமகன் உம்டட்டல் உமாராவும், இரகசியமாய்ச் சதி சூழ்ந்து ஆங்கிலேய துரைத்தனத்தைக் குலைக்க முயன்றதாக 1795-ல் குற்றஞ் சாட்டப்பட்டு விசாரணை நடந்துவருகையில், மருமகன் உம்டட்டல் உமாரா, 15-7-1801 அன்று இறந்துபோனார். இறந்தவரின் குமாரரை, அவர் தந்தையும் பாட்டனும்போல் துரோகஞ் செய்வதில்லையென்று ஜாமீன் கேட்க, அவர், அப்படி ஜாமீன் கொடுக்க மாட்டேனென்று மறுத்துவிட்டார். அதனால், அவரைப் பட்டத்தைவிட்டு நீக்கி, அவர் தம்பி அலீமுடுல்லாவை நவாபாக்கினர். இந்த அலீமுடுல்லா, பிரிட்டிஷார் தனக்கு வருஷாந்தரம் பென்ஷன் கொடுக்கிறதென்றும், கருநாடக நவாபுக்குச் சொந்தமான தேசங்கள் சிற்றரசுகள் யாவற்றின் இராஜ்யபரிபாலனத்தையும் உரிமையையும் பிரிட்டிஷார் வசம் விட்டுவிடுகிறதென்றும், 31-7-1801-ல் உடம்படிக்கை செய்துகொண்டு, அவ்வாறே எல்லாவற்றையும் ஒப்படைத்துவிட்டார்.

**மாவை குமாரசுவாமி முதலியார்**

திருநெல்வேலித் தளவாய் (கி. பி. 1688—1700)

|

அவர் மருமகனும் சுவீகாரபுத்திரருமான

ஆறை அழகப்பமுதலியார் I.

திருநெல்வேலித்தளவாய் 1700—1735

தென்மலைவன்னியனால் கொலையுண்டவர்

|

(1) தீத்தாரப்ப முதலியார் I (தளவாய் குமாரசுவாமி முதலியாரின் தமயனார்) சண்டாசாயபு தாப்பில் தளவாய் - 1751—1754

|

| | |
|---|---|
| தளவாய் தீத்தாரப்ப முதலியார் II 1783—1790 | தளவாய் இராமசுவாமி முதலியார் I |
| சந்ததியில்லை | |

(தளவாய் இராமசுவாமி முதலியார் I இன் சந்ததி)

| | |
|---|---|
| தளவாய் தீத்தாரப்ப முதலியார் III | தளவாய் திருமலையப்ப முதலியார் |
| தத்து புத்திரர் தளவாய் இராமசுவாமி முதலியார் II (ஆண்சந்ததியில்லை) | சந்ததியில்லை |
| | தளவாய் அழகப்ப முதலியார் III |
| | மூன்று குமாரர் |

(அடுத்தபக்கம் பார்க்க)

**மாவை குமாரசுவாமி முதலியார்**

திருநெல்வேலித் தளவாய் (கி. பி. 1688—1700)

|

அவர் மருமகனும் சுவீகாரபுத்திரருமான
ஆறை அழகப்பமுதலியார் I
திருநெல்வேலித் தளவாய் 1700—1735
தென்மலைவன்னியனால் கொலையுண்டவர்

|

(2) தளவாய் குமாரசுவாமி முதலியார் I (ஆறை அழகப்ப முதலியாரின் மருமகனும் தத்துபுத்திரருமானவர்) 1735—1759

|

தளவாய் திருமலையப்ப முதலியார் I - 1765—1782

|

மேடை தளவாய் குமாரசுவாமி முதலியார் II

- மேடை தளவாய் திருமலையப்பமுதலியார் II
  - மேடை தளவாய் குமாரசுவாமி முதலியார் III
    - மேடை தளவாய் அரங்கநாத முதலியார்
      - ஆண்மக்களில்லை
    - ராவ்சாகிப் மேடை தளவாய் திருமலையப்ப முதலியார் III
      - மேடை தளவாய் அரங்கநாத முதலியார்
      - மேடை தளவாய் குமாரசுவாமி முதலியார் IV
      - மேடை தளவாய் ஷண்முகக் குமாரசுவாமி முதலியார்
- மேடை தளவாய் இராமலிங்கமுதலியார்
  - சந்ததியில்லை

(முன்பக்கம் பார்க்க)

## (1) மூத்தகோடி - தீத்தாரப்ப முதலியார் வமிசம்

தளவாய் குமாரசுவாமி முதலியார் (1735-1759) ஆறை அழகப்ப முதலியாரின் தத்துபுத்திரர்; அவர் உடன்பிறந்தாள் மகளை மணம்புரிந்தவர். நவாபு முகம்மதலி தரப்பில் இவர் தளவாயா யிருக்கும்பொழுது, இவர் தமயனார் தீத்தாரப்ப (I) முதலியாரும் முண்டுமியாவும், 1751-1755 வரை, சண்டா சாயபு தரப்பில் தளவாய்களாக நியமிக்கப்பட்டனர்.

இவர் மகன் பெயர் அழகப்ப முதலியார் (1752-1764). இராணுவ சரித்திராசிரியரான ஆர்ம் துரை, அவரை, தளவாய் குமாரசுவாமி முதலியாரின் 'பந்து' வென்றும், 'மருமகன்'என்றும், தன் புஸ்தகத்தில் கூறியிருக்கிறார். கடைசி நாயக அரசரான விஜயகுமார திருமலை நாயகர், 1752-ம் ஆண்டிலே, இவரைத்தான் தளகர்த்தப் பிரதானியாக நியமித்தார். இவர் 1754-ல் யூஸப் கானுடைய முக்கிய உத்தியோகஸ்தர்களில் ஒருவரா யிருந்தார். அதே யாண்டில், பெயர்போன துஷ்டனும் வடகரைப்பாளையக்காரனுமான புலித்தேவனுடன் மத்தியஸ்தம் செய்ய, இங்கிலீஷ் கம்பெனியாரின் காரியஸ்தராக, தளவாய் குமாரசுவாமி முதலியார் இவரை அனுப்பினார். புலித்தேவன், 1757-ம் ஆண்டில், ஆழ்வார் குறிச்சியிலிருந்து நெக்கட்டஞ் செவனுக்கு இவரைச் சிறைசெய்து கொண்டுபோனான். யூஸப்கான் இறந்தபிறகு, இவர் எட்டு மாத காலம் திருநெல்வேலித் தளவாயாக வேலைபார்த்தார்.

இரண்டாவது அழகப்பமுதலியாரின் மூத்தகுமாரர், இரண்டாவது தளவாய் தீத்தாரப்ப முதலியா ரென்பவர் (1783-1790). ரிவீவர் ப்ராக்டர் துரையின் சிபார்சுப்படி, இவர், 1783 முதல் திருநெல்வேலிக் குத்தகைக்காரரா யிருந்தார். குலசேகரன்பட்டணத்தி லுள்ள, சகம் 1707 ஆவணி மாதத்திய, சிலாசாசன மொன்றில் (கி. பி. 1786), "ராசமான்

னிய ராசஸ்ரீ தளவாய் தீத்தாரப்ப முதலியாரவர்கள் அதிகார த்தில்" என்று எழுதியிருக்கிறது. திருநெல்வேலியி லுள்ள ஒரு பழைய சாசனத்தின்படி, இவர் தளவாய் திருமலையப்ப முதலியாரின் உடன்பிறந்தாள் மகனுவர். இரண்டாவது தளவாய் தீத்தாரப்ப முதலியாரின் தம்பிதான், முதலாவது தளவாய் இராமசுவாமி முதலியார். அவர் மூத்தமகனுன மூன்றுவது தளவாய் தீத்தாரப்ப முதலியார்தான், தளவாய் முதலியார் குடும்பத்தின் முன்காலத்துக் கீர்த்திகளைப்பற்றி, விவரமாய், சென்னை சதர் அடலத் கோர்ட்டாருக்கு, 15-2-1842-ல் லிகிதம் அனுப்பினவர். தளவாய் இராமசுவாமி (II) முதலியார், தளவாய் தீத்தாரப்ப (III) முதலியாரின் தத்துபுத்திரர். இந்த இராமசுவாமி முதலியார் தமிழ்ப்புலமை யுள்ளவர். இவர் 1805-ல் ஞானவாசிஷ்டம் என்னும் நூலை வசன நடையிலெழுதித் திருநெல்வேலியில் பிரசுரஞ் செய்தார். அதே ஆண்டிலே, வேலாயுதம் பிள்ளை என்பவரு ரெழுதிய வாசிஷ்ட முக்கிய விஷயம் என்னும் நூல், இவர் உதவியால் பிரசுரஞ் செய்யப்பட்டது.

## (2) தளவாய் குமாரசுவாமி முதலியார் வமிசம்

தளவாய் குமாரசுவாமி முதலியாரைப் பற்றிய விவரங்கள், மேலேயுள்ள அத்தியாயங்களில் கூறப்பட்டன.

அவர் மகன், தளவாய் திருமலையப்ப (I) முதலியார், தளவாய் அழகப்ப (III) முதலியாருக்குப் பின்(1766-1782) தளவா யுத்தியோகஞ் செய்தார். 1799-ல் கர்னல் ப்ரெய்த் வெயிட் என்பவர், "ஹிந்து குத்தகைக்காரர் தளவாய் முதலி" என்று, அவரைப்பற்றி எழுதியிருக்கிருர். அவருக்கும் ரிஸீவர் ப்ராக்டர்துரைக்கும் நிகழ்ந்த வழக்கு விவரங்களும் மேலே கூறப்பட்டன. 1783-ல், "முந்திய குத்தகைக்காரர்"

என்று அவரைப் பற்றிக் கூறியிருப்பதால், அவர் குத்தகை 1782-ல் முடிந்துவிட்டதெனத் தெரிகிறது.

தளவாய் முதலியார் குடும்பத்தார் குத்தகை 1790-ல் முடிந்தது; அவ்வாண்டு முதல் ஜில்லா கலெக்டர்கள் ஏற்பட்டு விட்டனர்.

இரண்டாவது பாளையக்காரர் யுத்தத்தில், பாளையக்காரருக்கும் ஆங்கிலேய உத்தியோகஸ்தருக்கும் இடையே, **மேடை** தளவாய் குமாரசுவாமி முதலியார் மத்தியஸ்தம் செய்தாரென்று தெரியவருகிறது. இவர்நாளி லிருந்துதான் **மேடை** என்னும் அடைமொழி **தளவாய்** என்னும் குடும்பப் பட்டத்துக்கு முன் (குடும்பத்தை விட்டு நாட்டுக்குத்தகை நீங்கிய பின்னர் குடும்பத்தின் கீர்த்தியை இவரே மீண்டும் துலக்கின ராதலின்) வைக்கப்பட்டது.

திருநெல்வேலிக் கருகே தாமிரவருணிக் கரையி லுள்ள மண்டபத்திலே, இவர் மக்கள், மேடை தளவாய் (II) திருமலையப்ப முதலியார், மேடை தளவாய் இராமலிங்க முதலியார்களின் கற்சிலைகளைக் காணலாம்.

மேடை தளவாய் திருமலையப்ப (II) முதலியாரின் குமாரர், மேடை தளவாய் குமாரசுவாமி (III) முதலியார். இவர், ஆங்கிலேய கவர்ன்மெண்டாரிடத்தில் அதிக விசுவாசமுள்ளவர்; ஏழை ஜனங்களுக்கு இரங்கி, வரையாது கொடுத்து உதவியவர். இப் பெருங்குணங்களை வியந்து, இந்திய சக்கரவர்த்தினியார் அதி மாட்சிமை தங்கிய விக்டோரியா மகாராணியார், இவருக்கு ஒரு யோக்கியதாபத்திரம் அளித்தார். அது வருமாறு:

“திருநெல்வேலி மேடை தளவாய் குமாரசுவாமி முதலியாரின் குமாரர் மேடை தளவாய் திருமலையப்ப முதலியாருக்கு:—

"பிரிட்டிஷ் இராஜாங்கத்தினிடத்தில் அவருக்குள்ள ராஜபக்தியையும் விசுவாசத்தையும், ஏழைகளுக்கு அவர் செய்துள்ள தருமங்களையும், அங்கீகரித்துப் பாராட்டி, அதி மாட்சிமை தங்கிய இந்திய சக்கரவர்த்தினியார் விக்டோரியா மகாராணியாரின் பெயரால், மாட்சிமை தங்கிய இராஜப் பிரதிநிதி கவர்னர் ஜனரல் அவர்கள் கட்டளையின்படி, இந்த யோக்கியதா பத்திரம் அளிக்கப்பட்டது.

1877ஞு ஜனவரி 12உ

(கையொப்பம்) (பிரபு) பக்கிங்ஹாம் - சாண்டாஸ்

(சென்னை மாகாண கவர்னர்)

அவர் குமாரர் மகா-ா-ா-ஸ்ரீ, ராவ்சாகிப் மேடை தளவாய் திருமலையப்ப முதலியார், இப்பொழுது குடும்பத்தின் தலைவராய் விளங்குகிறார். இவரும் பல வகைகளில், முக்கியமாய் ஏழைகளுக்கு இரங்கித் தருமம் செய்வதில், பேர் போனவர். முடி சூட்டுக் கொண்டாட்ட நாளன்று, பல்லாயிரம் ஏழை ஜனங்களுக்கு இவர் அன்ன வஸ்திரம் உதவினார். குருடர் பள்ளிக்கூடத்துக்கு ரூ. 1500 நன் கொடையளித்தது மன்றி, ஐம்பதுரூபாய் சந்தாவாகக் கொடுத்துவருகிறார். அந்தப் பள்ளியின் வளாகத்தில் ஒரு கிணறு வெட்ட ரூ. 200 உதவினார். செவிடர், ஊமையர் பள்ளிக்கு ரூ. 1500 நன் கொடை அளித்திருக்கிறார். 1918ஞு ஜனவரி முதல் தேதி யன்று, ராவ்சாகிப் பட்டம், சர்க்காரால் இவருக்கு அளிக்கப்பட்டது. குருடர் பள்ளிக்கூடத்தில் நிகழ்ந்த முடி சூட்டுக் கொண்டாட்ட வர்த்தமானத்தி லிருந்து எடுக்கப் பட்டது பின் வருவது:—

"திருநெல்வேலி, ஜனவரி 31உ "தரிசனமனை"

"நேற்றுப் பிற்பகல், மிஸ். ஆஸ்க்வித் அம்மாளின் பேர் போன குருடர் பள்ளிக்கூடம், திருவிழாக்கோலம் பூண்டு

விளங்கி, முடிசூட்டுநாளையும், திருநெல்வேலியிலே செல்வமும் செல்வாக்கும் நிரம்பிய கனவான் மகா-ஈ-ஈ-ஸ்ரீ மேடை தளவாய் திருமலையப்ப முதலியாரவர்கள் கட்டியுதவிய மாணவர் விடுதியின் கிரகப்பிரவேசத் திருவிழாவையும், கொண்டாடிற்று. பள்ளிக்கூடம் உள்ளும்புறமும் கொடி தோரணங்களால் அலங்கரிக்கப்பட் டிருந்தது. திருநெல்வேலி ஜில்லா கலெக்டரான Mr. W. பிரான்ஸிஸ் (I. C. S.), அவர் மனைவியார் Mrs. பிரான்ஸிஸ், திருநெல்வேலி பிஷப், அவர் மனைவியார் Mrs. வில்லியம்ஸ், சிங்கம்பட்டி ஜமீன்தார், இன்னும் பல கனதனவான்கள் உட்பட, பெருங்கூட்டம் கூடியிருந்தது. தன் பள்ளிக்கூடத்தில் கல்வி பயின்று நற்பயனடைய வந்துசேரும் மேல் சாதிக் குருட்டு மாணவர்களின் உபயோகத்துக்காகப் புதியதோர் கட்டடத்தையும் கிணற்றையும் கட்டி யுதவிய ஸ்ரீமான் மேடை தளவாய் திருமலையப்ப முதலியாரவர்களின் உதாரகுணத்தைப் புகழ்ந்து நன்றிபாராட்டி, மிஸ். ஆஸ்க்வித் அம்மாள் பேசினார். நேற்று நிகழ்ந்த திருவிழாக்கொண்டாட்டமும், ஸ்ரீமான் திருமலையப்ப முதலியார் செலவில்தான் நடைபெற்றது.

அப்பால், Mrs. பிரான்ஸிஸ், மாணவர்களுக்குப் பரிசுகளை அளிக்கும்போது, பின் வருமாறு பேசினர்:—இன்றைய முடிசூட்டுத் திருவிழாக் கொண்டாட்டத்தை, இந்தப் பள்ளிக்கூடத்து மாணவர்களான சிறுவர் சிறுமிகள் விரைவில் மறந்துவிட மாட்டார்கள். இன்றுகாலை நாலு மணிக்கே அவர்கள் பரபரப்போடு விழித்தெழுந்தன ரென்றும், தங்கள் வாழ்நாளில் என்றும் அறியாத பெரும்பாக்கியத்தை இன்று அவர்கள் அடைந்து மகிழ்ந்தன ரென்றும், மிஸ். ஆஸ்க்வித் எனக்குச் சொன்னார். இதற்கு, அவர்கள், இந்தக் கட்டடத்தையும் கிணற்றையும் கட்டி யுதவியது

மன்றி, இவ்வைறக் கொண்டாட்டத்துப் பரிசுகள் வேடிக்கை விளையாட்டுக்கள் முதலியன, எல்லாச் செலவுகளையும் தானே உபகரித்துள்ள ஸ்ரீமான் தளவாய் திருமலையப்ப முதலியா ரவர்கட்கு நன்றி பாராட்டவேண்டும். இந்தக் கனவானை நான் கடைசியாய்ச் சந்தித்தபோது, அவர், செவிடர் ஊமையர் பள் ளிக் கூடத்துக்கு வேண்டிய உதவி புரிந்துகொண் டிருந்தார். * * *. திருநெல்வேலி மதுரை ஜில்லாக்களின் பிஷப் பிரபு பின்வருமாறு எழுதியிருக்கிறார்:— "ஸ்ரீமான் திருமலையப்ப முதலியார் கட்டியளித்த அழகான புதுக் கட்டடம் பிரான்ஸிஸ் தம்பதிகளால் கிரகப் பிரவேசம் நடத்தப்பட்டு, பிஷப் அவர்களால் தேவாராதனையுடன் பிரதிஷ்டை செய்யப் பட்டது. குழந்தைகளுக்கு ஆடைகளும் நல்விருந்தும் மாணவர்க்குப் பரிசுகளும் அளிக்கப்பட்டதுமன்றி, ஞாபகார்த்தமாக விருக்ஷங்களும் நடப்பட்டன. * * "

மகா-ள-ள-ஸ்ரீ, ராவ்சாகிப் மேடை தளவாய் திருமலையப்ப முதலியாரின் மக்களாவார்:—(1) மேடை தளவாய் அரங்கநாத முதலியார்–ஜனனம் 3-2-1895; கல்வி பயின்றது, சென்னையில்; விவாகம் 6-7-1913 (2) மேடை தளவாய் குமாரசுவாமி (II) முதலியார்—ஜனனம் 14-7-1897; கல்வி பயின்றது, திருநெல்வேலியிலும் சென்னையிலும்; விவாகம். 6-7-1913 (3) மேடை தளவாய் ஷண்முகக் குமாரசுவாமி முதலியார் - ஜனனம் 7-5-1899; கல்வி பயின்றது திருநெல்வேலியிலும் சென்னையிலும்; விவாகம் 1-7-1915 (4) அலர்மேல் அண்ணி (மகள்) ஜனனம் 24-11-1901; கல்வி பயின்றது முக்கியமாய் வீட்டிலேயே; விவாகம் 30-6-1915.

Printed at the India Printing Works, Madras